

# அம்புலிமாமா

*செப்டம்பர் 1995*



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ.5.00**

**வருட சந்தா ரூ.60.00**




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி





## பொன்னான முடிவுகள்

டில்லி மாநில அரசும் கேரள அரசும் குழந்தைகளின் நலனைக் கருத்தில் கொண்டு இரு ஆணைகளைப் பிறப்பித்துள்ளன. டில்லி நகராட்சி மன்றம் ஒரு பள்ளிக்கு மேலுள்ள தெருக்களில் கனரக வாகனங்கள் பள்ளி நேரங்களில் செல்லக் கூடாது என்று தடை விதித்துள்ளது. இத்தகைய தடை உயர்நீதி மன்றத்தில் ஒரு வழக்கில் தீர்ப்புக் கூறும் போது விதிக்க, கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இது புது டில்லியிலும் ஜன நெருக்கடி மிகுந்த பழைய டில்லியிலும் அமுலில் இருக்கும்.

கேரளாவில் அரசே ஒரு உத்தரவைப் பிறப்பித்துள்ளது. அதன்படி பள்ளிகளுக்குள்ளோ அல்லது கல்லூரிகளுக்குள்ளோ யாரும் சிகரெட் பிடிக்கக்கூடாது என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த ஆணையை யார் மீறினாலும் அவர்மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் எச்சரிக்கப்பட்டுள்ளது. ஆம். மாணவர்களில் சற்று வயதானவர்கள் சிகரெட் குடிப்பதைக் காண்கிறோம். இவர்களுக்கு மட்டும் இந்த அரசு ஆணை அல்ல, ஆசிரியர்களுக்கும் தான். ஏனெனில் ஆசிரியர்கள் அவர்களுக்கென ஒதுக்கப்பட்ட அறைகளில் சிகரெட் பிடிப்பது வழக்கமாக இருந்தது. இப்போது இந்த ஆணையால் அவர்கள் அவ்வாறு செய்யத் தடை செய்யப்பட்டிருக்கிறார்கள். ஆசிரியர்கள் மாணவர்களுக்கு முன் மாதிரியாக இருக்க வேண்டுமென கேரள அரசு விரும்புகிறது.

இந்த இரு அரசுகள் ஆணையிட்டது போல மற்ற மாநில அரசுகளும் இவ்வித ஆணைகள் பிறப்பிக்க முன் வர வேண்டும்.

**மதிமுகம்: 97** **செப்டம்பர் 1995** **புன்னகை: 3**

**தனிப்பிரதி: ரூ.5.00** **வருட சந்தா: ரூ.60.00**



# மங்கை
## தீபாவளி சிறப்பு
## ஆலய மலர் - 1995



அருள்மிகு அத்திவரதர், விஷ்ணு காஞ்சி

அன்பார்ந்த வாசகர்களே!

மங்கை தீபாவளி மலர் தமிழக மக்கள் அனைவருக்கும் பயன் தரும் ஆலய மலராக - அறிவுக் கருவூலமாக - பக்தி ரஸம் கமழும் மலராக மலர இருக்கிறது. உங்கள் தூய எண்ணம் பூரிப்புடன் நிறைவுறுமாறு முதுபெரும் ஓவியர் திரு. சில்பியின் வண்ண ஓவியங்கள் மற்றும் வண்ண புகைப்படங்களுடன் முழுக்க முழுக்க வண்ண மலராக வலம் வர இருக்கிறது. இதுவரை வெளிவந்த இரண்டு ஆலய மலர்கள் தமிழகத்தில் மகிமை பொருந்திய தேவாரப் பாடல்கள் பெற்ற சிவத்தலங்களாக மலர்ந்திருந்தன.

இவ்வாண்டு தீபாவளி அன்று வெளிவரும் சிறப்பு ஆலய மலர் தமிழகத்தின் தொண்டை நாட்டு வைணவத்தலங்களான திருவல்லிக்கேணி பார்த்தசாரதி ஆலயம், திருவள்ளூர் வீரராகவப் பெருமாள் ஆலயம், திருப்பெரும்புதூர் ஆதிகேசவப் பெருமாள் ஆலயம், காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் ஆலயம், திருவஹிந்தபுரம் தேவநாதப் பெருமாள் ஆலயம், ஸ்ரீமுஷ்ணம் பூவராகப் பெருமாள் ஆலயம், திருக்கோவிலூர் திருவிக்கிரமசுவாமி ஆலயம், திருவரங்கம் ஸ்ரீரங்கநாதப்பெருமாள் ஆலயம் மற்றும் தஞ்சை மாவட்டத்தில் உள்ள கிருஷ்ண பஞ்ச ஆரண்யத் தலங்களைப் பற்றி விரிவான புராண மற்றும் ஸ்தல வரலாறுகளுடன் வெளிவர உள்ளது. **இதன் விலை ரூபாய். 30/-**

ஒவ்வொரு முறையும் ஆலய மலர் தீர்ந்துவிட்டதே என ஏமாற்றத்துடன் தொலைபேசி மூலமாகவோ அல்லது கடிதம் எழுதுவதன் மூலமாகவோ தெரிவிக்கும் அன்பார்ந்த வாசகர்கள், தங்கள் ஏமாற்றத்தைத் தவிர்க்க இப்போதே உங்கள் ஊர் ஏஜண்டிடமோ அல்லது கடைகளிலோ உங்கள் பெயரை முன்பதிவு செய்து கொள்ளுங்கள்.

இதர விபரங்களுக்கு:

**மங்கை ஆலய மலர்**

டால்டன் பப்ளிகேஷன்ஸ்
சந்தமாமா பில்டிங்ஸ்,
வட பழனி, சென்னை-600 026.



செய்திகளும் தகவல்களும்

# விண்வெளியில் கைகுலுக்கல்!

விண்வெளியில் ரஷ்யா நிறுவிய 'மீர்' என்ற விண்வெளி நிலையத்தோடு அமெரிக்க விண்வெளி ஷட்டில் அட்லாண்டிஸ் ஜூன் 19ல் ஒன்றாகச் சேர்ந்தது. இத்தகைய அற்புதம் கடந்த 20 ஆண்டுகளில் இப்போது இரண்டாவது முறையாக நிகழ்ந்தள்ளது.

1975 ஜூலையில் அமெரிக்க விண் வெளிக் கப்பல் அப்போலோ சோவியத் விண்வெளிக் கப்பல் சோயஸைச் சந்தித்தது. அப்போது அமெரிக்காவிற்கும் ரஷ்யாவிற்குமிடையே பனிப் போர் நடந்து கொண்டிருந்தது. இந்த அரசியல் நடவடிக்கைகளால் இந்த விண்வெளிச் சந்திப்பு முக்கியத்துவம் பெறாமல் போய் விட்டது. ஆனால் இந்த நிகழ்ச்சி விஞ்ஞான நுணுக்கங்களை மேலும் ஆராய வழிகோலியது. சோவியத் யுனியன் சிதறுண்டு போன பின் ரஷ்யாவிற்கும் அமெரிக்காவிற்குமிடையே இருந்த பகைமை மறைந்தது. இரு நாடுகளும் நட்பு கொண்டு கைகுலுக்கிக் கொண்டன.

இதன் பலனாக விண்வெளியில் 15 நாடுகள் சந்திக்க வசதியாக அனைத்து நாடுகள் விண்வெளி நிலயம் அமைத்துப் பலவித திட்டங்களை நிறைவேற்ற முயற்சிகள் நடந்து வருகின்றன. ஏழு விண்வெளிப் பயணிகளுடன் அமெரிக்க விண்வெளிக் கப்பல் அடலாண்டிஸ் அமெரிக்காவிலிருந்து ஜூன் 27ல் கிளம்பியது. இரண்டு நாட்கள் அது விண்வெளி நிலயம் மீரைச் சுற்றி வந்த பின் அத்துடன் சேரத் தயாரானது. ஜூன் 29ல் இரண்டும் ஒன்றை ஒன்று தொட்டுக் கொண்டு நின்றன. அது பார்ப்பதற்கு மிகப் பெரிய விண்வெளிக் கப்பல் போலக் காட்சி அளித் தது.

ஹோஸ்டனிலிருந்தும் காலினிக்ராடிலிருந்தும் அதாவது பூமியிலிருந்து விண்வெளிப் பயணிகள் மீரில் இறங்க அனுமதி அளிக்க இரண்டு மணி நேரம் பிடித்தது. அதன்பின் விண்வெளிப் பயணிகள் கை குலுக்கிக் கொண்டு ஒருவரையொருவர் கட்டித்தழுவிக் கொண்டார்கள்.

மததிய ஆசியாவில் மங்கோலிய எல்லையில் சுமார் 245 மைல் உயரத்தில் இந்த மெய் சிலிர்க்கும் நிகழ்ச்சி எவ்வித இடையூறும் இல்லாமல் நடைபெற்றது. இது நடக்கையில் இரண்டு விண்வெளிக் கலங்களும் ஐந்து மைல் வேகத்தில் சுழன்று கொண்டிருந்தன. 122 அடி நீளமுள்ள மீருடன் சேர்ந்தபோது அமெரிக்க கமாண்டர் கேப்டன் கிப்ஸன் "நாங்கள் பிடித்து விட்டோம்" என மகிழ்ச்சி ததும்பக் கூறினார்.

அதன்பின் அவர்கள் மீரில் பல ஆய்வு களை நடத்தினார்கள். மீரிலிருந்து ஐந்து நாட்களுக்குப் பின் நார்மன்டாகார்டுடன் மற்றும் மூவரும் தம் விண்வெளிக் கப்பலுக்கு வந்து அமெரிக்காவுக் குத் திரும்பினர். அவர்களுக்கு பதிலாக மூவர் அட்லாண்டிஸிலிருந்து மீருக்குச் சென்றனர். மீரிலிருந்து இருவர் சோயஸிற்குச் சென்றபின் இருகலங்களும் மீரிலிருந்து விடுபட்டன. இந்தக் காட்சிகளை எல்லாம் புகைப்படங்களாக எடுத்திருக்கிறார்கள்.

அட்லாண்டிஸ் பூமிக்கு ஜூலை 7ல் திரும்பி வந்தது. வரலாற்றுச் சிறப்புமிக்க இந்நிகழ்ச்சியைத் தொலைக்காட்சியில் கண்ட அமெரிக்க ஜனாதிபதி பில் கிளிண்டன் "பார்த்தீர்களா? இனி எம் இரு நாடுகிளிடையே எவ்விதப் போட்டியும் இராது" என்றார்.





# இரு வீரர்கள்

விந்திய மலைக் காட்டில் வசிக்கும் வேடர்களின் தலைவன் மகாவீரன். அவனது தலைமையில் அப்பகுதியில் வசிக்கும் வேடர்கள் தமக்குள் சண்டை சச்சரவு எதுவும் இல்லாமல் மகா வீரனின் சொல்லுக்குக் கட்டுப் பட்டு வந்தார்கள்.

மகாவீரனுக்கு வயதாகிக் கிழவ னாகி விட்டபோது வேடர்களின் தலைமைப் பதவிக்கான பிரச்னை எழுந்தது. வேடர்களில் எந்தப் பல சாலியும் எப்போது வேண்டுமானா லும் தான் எல்லோரையும் விட பலம் பொருந்தியவன் எனப் போட்டி களில் நிரூபித்து அவர்களின் தலை வனாகி விடலாம். மகாவீரனை அதுவரை யாரும் எதிர்க்காததால் அவனே நீண்ட காலம் அவர்களது தலைவனாக இருந்து வந்தான்.

மகாவீரனின் மகள் குயிலி. அவள் மிகவும் அழகானவள். அவளை மணக்கப் பல வாலிபர்கள் போட்டி போட்டனர். அவர்களில் நஞ்சன் என் பவனும் ஒருவன். அவன் குயிலியை மிகவும் விரும்பினான்.. குயிலியும் அவனையே மணக்க விரும்பினாள். இருவரும் காட்டில் பல இடங்களில் சந்தித்துப் பேசி தம் எதிர்கால வாழ்க் கைப் பற்றி இன்பக் கனவுகளைக் கண்டு வந்தார்கள்.

மகாவீரன் தன் மகளைத் தனக்குப் பின் வேடர் தலைவனாக வரப் போகிறவனுக்கு மணம் முடித்து வைக்கப் போவதாக அறிவித்தான். அதுபற்றி நஞ்சன் கவலைப்பட வில்லை. ஏனெனில் அவன் வாட் போர், மற்போர், வில் போர் என்பதிலெல்லாம் திறமை பெற்ற வன். அதனால்தான் எந்தப் போட்டி யிலும் தன்னை யார் எதிர்த்தாலும் எளிதில் வெற்றி பெற்று விடலாம் என்று எண்ணிப் பெருமைபட்டுக்

—சிவனார் செல்வன்—

கொண்டிருந்தான்.

போட்டிகளுக்கான அறிவிப்புகள் செய்யப்பட்டன. போட்டியில் கலந்து கொள்ளப் பல வாலிபர்கள் வந்தார்கள். அவர்களில் பொம்மன் என்பவனும் ஒருவன். அவன் காளியம்மாள் என்பவளின் மகன். எல்லாப் போர்களிலும் அவள் அவனைத் திறமை மிக்கவனாகச் செய்திருந்த போதிலும் அவன் திறமையை வெளிக் காட்டாமலேயே ரகசியமாக வைத்துப் பாதுகாத்து வந்தாள். அதற்குக் காரணமும் இருந்தது.



மகாவீரன் வேடர்களின் தலைவனானதும் தன்னை எதிர்த்துப் போட்டியிட்டு வெல்லக் கூடியவன் யார் எனப் பார்த்தான். அப்படிப்பட்ட பலசாலி கல்லன் என்பது அவனுக்குத் தெரிந்தது. எனவே அவன் தன்னோடு போட்டி போட வருமுன் அவனை ஒழித்துவிட வேண்டுமென மகாவீரன் எண்ணினான். அதனால் ஒரு நாள் சில ஆட்களை அனுப்பி அவன் ரகசியமாகக் கல்லனைக் கொன்று விட்டான்.

இந்தக் கல்லனின் மனைவிதான் காளியம்மாள். இவனது மகன்தான் பொம்மன். கல்லன் கொல்லப்பட்ட போது பொம்மனின் வயது எட்டு. காளியம்மாவிற்குக் கல்லனைக் கொலை செய்தது மகாவீரன்தான் என்பது தெரிந்திருந்ததால் ஒருநாள் காளியம்மாள் மகாவீரனைச் சந்தித்து ''நீதான் என் கணவனைக் கொலை செய்தாய் என்பது எனக்குத் தெரியும். இதோ பார். என் மகன் பொம்மனே இந்தத் தலைமைப் பதவியைஅடையும்படி செய்கிறேன்'' என்றாள்.

மகாவீரனோ பலமாகச் சிரித்து ''நீயா அப்படிச் செய்யப் போகிறாய்? இருக்க இடமோ உண்ண உணவோ இல்லாத தரித்திரம் நீ. என்னிடமா சவால் விடுகிறாய்?'' என்று கூறி அவளை அலட்சியப்படுத்தினான். அதன் பிறகு அவன் காளியம்மாளையும் பொம்மனையும் பற்றி நினைக்கக் கூடவில்லை.

ஆனால் காளியம்மாள் மட்டும் தான் விட்ட சவாலை மறக்கவில்லை. அவள் பொம்மனுக்கு வாட்போர், மற்போர், அம்பு எய்தல் ஆகிய



லிடம் பெறுபவனுக்குத் தலைமைப் பதவியைக் கொடுத்துவிட்டு தன் மகள் குயிலியையும் அவனுக்கே மண முடித்து வைப்பதாயும் மகாவீரன் அறிவித்தான்.

இதைக் கேட்டு நஞ்சன் கலங்கி விடவில்லை. அவன் குயிலியிடம் ''இந்தப் போட்டிகளில் யாராலும் என்னை வெல்ல முடியாது. அதனால் எனக்குத்தான் நீயும் தலைமைப் பதவியும். இதில் சந்தேகமே இல்லை'' என்றான். குயிலியும் ''ஆமாம். நீங்களே வெற்றி பெற்று என்னை மணக்கப் போகிறீர்கள். நம் எதிர்கால வாழ்க்கை இன்பகரமாக இருக்கப் போகிறது'' என்றாள்.

மூன்றுவிதப் போட்டிகள் நடக்குமென அறிவிக்கப்படடது. அவை வாட்போர், மற்போர், வில்யுத்தம் என்பன. முதலாவது மற்போர். இதில் கலந்து கொள்பவர்கள் மற்போரில் வெற்றி பெற்றுத் தன் உடல் வலிமையைக் காட்ட வேண்டும். இரண்டாவது வாட்போர். இது ஒரு கத்தி கொண்டு ஒரு புலியை எதிர்த்து அதனை வீழ்த்தித் தன் துணிச்சலைக் காட்டுவதாகும். மூன்றாவது அம்பு எய்யும் திறமை. மாரியம்மன் சிலைக்கு முன் ஒரு தட்டில் குங்குமம் வைக்கப்பட்டிருக்கும். எவன் அம்பு எய்து தட்டு கவிழாமல் குங்குமம் மட்டும் மாரியம்மன் சிலை மீது விழச் செய்வானோ அவனே அப் போட்டியில் வெற்றி பெற்றவனாகக் கருதப்

போர்க் கலைகளில் நல்ல பயிற்சி பெற ஏற்பாடு செய்தாள். அவன் அக் கலைகளில் தலை சிறந்து விளங்கினான். அவனது திறமையை வெளிப்படுத்தாமல் ரகசியமாகவே வைத்திருக்கச் செய்தாள். ஏனெனில் அப்படிப்பட்ட பலசாலியான பொம்மனை மகாவீரன் கல்லனைக் கொன்றது போலக் கொன்று விடுவானோ என்றே அவள் பயப்பட்டாள்.

வேடர்களெல்லாம் தங்கள் தேவதையான மாரியம்மனுக்கு ஆண்டு தோறும் திருவிழா நடத்துவார்கள். அந்த ஆண்டுத் திருவிழாவின் போது தலைமைப் பதவிக்கான போட்டிகள் நடக்கும் என்றும் அப் போட்டிகளில் வெற்றி பெற்று முத

படுவான்.

போட்டிக்கு வந்தவர்களை மகா வீரன் முதலில் மற்போரில் கலந்து கொள்ளச் செய்தான். அதில் நஞ்சனே யாவரிலும் முதலாவதாக வந்தான். இதைக் கண்டு குயிலி மனம் மகிழ்ந்தாள். அடுத்து நடந்த வாட்போர் போட்டியில் பொம்மன் முதலாவது இடம் பெற்றான். எனவே மூன்றாவது போட்டியில் இவர்களில் யார் வெற்றி பெறுவானோ அவனே தலைமைப் பதவியை அடைந்து குயிலியையும் மணந்து கொள்வான்.



நஞ்சன் இப்படி ஒரு நிலை உருவாகும் என்று எதிர்பார்க்கவில்லை. பொம்மனின் திறமையை எல்லோரும் புகழ்ந்ததோடு அவன் அம்பு எய்வதில் திறமைசாலி என யாவரும் கூறக் கேட்டு நஞ்சன் கலங்கிப் போனான். ஏனெனில் அவன் அம்பு எய்வதில் திறமை பெற்றவன் அல்ல. தலைமைப் பதவியோடுதான் நேசிக்கும் குயிலியையும் இழக்க வேண்டி வருகிறதே என்று கவலைப்பட்டான்.

அப்போது குயிலி ''கவலைப்பட வேண்டாம். நாம் பொம்மனைச் சந்தித்து நம் நிலையை எடுத்துக் கூறுவோம்'' என்று சொல்லி அவனைத் தேற்றி அவனோடு பொம்மனைக் காணச் சென்றாள். இருவரும் பொம்மனிடம் தம் காதலைக் கூறித் தம்மைப் பிரிக்க வேண்டாம் என்று அவனிடம் கெஞ்சினார்கள். அப்போது பொம்மன் ''உனக்குத் தலைமைப் பதவி வேண்டுமா அல்லது குயிலி வேண்டுமா?'' என்று கேட்டான். நஞ்சனும் ''எனக்கு குயிலி கிடைத்தால் போதும். தலைமைப் பதவியை விட்டு விடுகிறேன்'' என்றான். பொம்மனும் ''சரி. இந்தப் போட்டியில் நீ வெல்ல வழி செய்கிறேன். அதனால் உனக்குத் தலைமைப் பதவி கிடைக்கும். குயிலியும் கிடைப்பாள். நீ பதவி ஏற்ற பின் உன்னை நான் போட்டிக்கு அழைத்துத் தலைமைப் பதவியை அடைகிறேன். இது சம்மதமா?'' என்று கேட்டான்.

நஞ்சனும் அது தனக்குச் சம்மதமே எனவே பொம்மன் அவனுக்கு அம்பு எய்வதில் சில புது முறைகளையும் கற்றுக் கொடுத்தான். மாரியம்மன்

விழாவின் போது வில் போட்டி நடந்தது. அதில் பொம்மன் எய்த அம்பு குங்குமத் தட்டை விட்டு விலகிச் சென்றது. நஞ்சன் எய்த அம்பு தட்டிலுள்ள குங்குமத்தில் உரசி அதை அம்மன் சிலை மீது படச் செய்தது. போட்டியில் வெற்றி பெற்ற நஞ்சன் தலைமைப் பதவி பெற்றான். குயிலியையும் மணந்து கொண்டான்.

இதற்கு மூன்று நாட்களுக்குப் பின் பொம்மன் நஞ்சனைப் போட்டிக்கு அழைத்தான். அதில் பொம்மன் மிக எளிதாக நஞ்சனைத் தோற்கடித்து தலைமைப் பதவியை அடைந்தான். மகாவீரனுக்கு இது ஆச்சரியத்தை விளைவித்தது. யார் இந்த பொம்மன் என்று விசாரிக்கத் தொடங்கினான். அப்போதுதான் பொம்மன் கல்லனின் மகன் என்பது தெரிய வந்தது.

பொம்மன் தலைமைப் பதவி ஏற்றதுமே காளியம்மாள் மகா வீரனை அழைத்து ''பார்த்தாயா! நான் முன்பு உன்னிடம் சவால் விட்டபடி என் மகன் தலைமைப் பதவி அடையச் செய்து விட்டேன். அம்பு எய்யும் போட்டியில் கூட என் மகன் வெற்றி பெற்றிருப்பான். ஆனால் உன் மகளும் நஞ்சனும் அவனிடம் வந்து கெஞ்சிக் கேட்டுக் கொண்டதன் பேரில் என் மகன் விட்டுக் கொடுத்தான். அப்போது நஞ்சன் தனக்குக் குயிலிதான் வேண்டும், தலைமைப் பதவி வேண்டாம் என்று கூறவே அவர்களிடையே ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. பொம்மன் கடைசிப் போட்டியில் நஞ்சனுக்கு விட்டுக் கொடுத்துத் தலைமைப் பதவியையும் குயிலியையும் அடைந்து விடுவது என்றும் பின்னர் பொம்மன் நஞ்சனைத் தன்னோடு சண்டையிட அழைத்து அதில் வென்று தலைமைப் பதவியை அடைவது என்றும் அவர்கள் செய்து கொண்ட ஏற்பாட்டின் படி எல்லாம் நடந்தது'' என்றாள்.

அதைக் கேட்ட மகாவீரன் பொம்மனைப் பாராட்டி ''நீ வீரர் திலகம் மட்டுமல்ல, உயர்ந்த உள்ளம் படைத்தவன்'' எனப் புகழ்ந்தான்.





# படிக்க முடியவில்லை

காளிமுத்து என்ற விவசாயி கட்டை யூரில் இருந்தான். அவன் தினமும் ஊரார் கூடிப் பேசும் அரசமரப் பிள்ளையார் மேடைக்குப் போய் உட்கார்ந்து அங்கு வரும் ஊர்ப் பிர முகர்கள் பேசுவதைக் கேட்பான். அவன் அவர்களது பேச்சில் கலந்து கொள்ள முயன்றால் எடுத்த எடுப்பி லேயே மற்றவர்கள் அவனை மட்டம் தட்டி விடுவார்கள்.

இம்மாதிரி சமயங்களில் காளி முத்து பதில் எதுவும் கூறாமல் பேசா மல் அந்த இடத்தைவிட்டுப் போய் விடுவான். ஆனால் மறுநாள் மறுபடி யும் அதே இடத்திற்கு வந்து உட்கார் வான். இப்படி இருக்கையில் ஒரு நாள் பண்ணையார் பரமசிவம் அங்கு வந்ததும் அங்கிருந்தவர்களில் ஒருவர் ''ஐயா! பட்டணத்திற்குப் போய்க் கண் வைத்தியரைப் பார்த்தீர்களா? அவர் என்ன சொன்னார்?'' என்று கேட்டார்.

பண்ணையாரும் உடனே தம் சட் டைப் பையிலிருந்து மூக்குக்கண்ணா டியை எடுத்துக்காட்டி ''இதைப் போட்டுக் கொண்டால் எல்லாம் நன் றாகத் தெரிகிறது. நன்றாகப் படிக்க முடிகிறது. இதைத்தான் என் கண் ணைப் பரிசோதித்த கண் டாக்டர் கொடுத்தார்'' என்றார்.

அப்போது இன்னொருவர் ''அப் படியா? நானும் அதே கண் வைத்தி யரிடம் போய் கண்ணைக் காட்டி மூக்குக் கண்ணாடி வாங்கிக் கொள்கி றேன். அப்போது என்னால் நன்கு படிக்க முடியும்'' என்றார். இதை யெல்லாம் கேட்ட காளிமுத்து தன் மனதில் ''ஓ! கண்ணாடி போட்டுக் கொண்டால் நன்றாகப் படிக்க வரும் என்கிறார்களே. அப்படியானால் நானும் பட்டணத்திற்குப் போய் கண் வைத்தியரைப் பார்த்து மூக்குக்

—பவானி சங்கரன்—

கண்ணாடி வாங்கிக் கொள்கிறேன். அப்போது என்னால் படிக்க முடியும்'' என்று எண்ணிக் கொண்டான்.

அவன் பட்டணத்திற்குப் போய் எல்லோரிடமும் ''எங்கள் ஊர் பண்ணையாருக்குக் கண்வைத்தியம் செய்த வைத்தியரின் வீடு எங்கே இருக்கிறது?''' என்று கேட்டான். எல்லோரும் தமக்குத் தெரியாது என்றனர். ஆனால் ஒருவர் அவனிடம் ''அதோ தெரியும் வீட்டில்தான் இவ்வூரின் பிரபலக் கண் வைத்தியர் இருக்கிறார். போய் அவரைப் பார்'' என்றான்.

காளிமுத்துவும் அந்த வைத்தியரின் வீட்டிற்குப் போய் ''எனக்கும் எங்கள் ஊர் பண்ணையாருக்குக் கொடுத்தது போல ஒரு மூக்குக் கண்ணாடி கொடுங்கள். நானும் அவரைப் போல நன்கு படிக்க வேண்டும்'' என்றான்.

கண் வைத்தியரும் அவனை ஒரு நாற்காலியில் உட்கார வைத்து சற்று தூரத்தில் மாட்டப்பட்டிருந்த அட்டையைக் காட்டி ''அதில் எந்த வரிசை எழுத்துக்களைப் படிக்க முடிகிறது?'' என்று கேட்டார். காளிமுத்துவும் ''எதையும் படிக்க முடியவில்லையே'' என்றான். வைத்தியரும் அவன் மூக்கில் ஒரு ஃப்ரேமை வைத்து அதில் கண்ணாடிகளை மாற்றி மாற்றிப் போட்டு ''இப்போது படிக்க வருகிறதா? எந்த வரிசை எழுத்துக்கள் உனக்கு நன்றாகப் படிக்கத் தெரிகின்றன?'' என்று கேட்டார்.

காளிமுத்துவும் வெகு நேரம் வரை படிக்க முடியவில்லை என்று சொல்லவே கண் வைத்தியர் ஏதோ சந்தேகப்பட்டவராய் ''உனக்கு எழுதப் படிக்கத் தெரியுமா?'' என்று கேட்டார். காளிமுத்துவும் ''அதுதான் தெரியாதே. படிக்க தெரிய வேண்டும் என்பதற்குத்தானே கண்ணாடி போட்டுக் கொள்ள வந்தேன். மூக்குக் கண்ணாடி போட்டுக் கொண்டால் நன்றாகப் படிக்க வரும் என்றார்களே. அது பொய்யா?'' என்றான். வைத்தியர் என்ன பதில் சொல்வார் பாவம்!






# 2

(ட்ராய் நகர வீழ்ச்சிக்குப் பின் தன் நாட்டிற்குக் கிளம்பிய ரூபதரனும் அவனது ஆட்களும் கப்பல்களில் சென்ற போது அவை புயலில் சிக்கி ஒரு தீவின் கரையோரம் ஒதுக்கப்பட்டன. அத்தீவிலுள்ளவர்கள் எப்படிப்பட்டவர்கள் எனக் காண ரூபதரன் தன்னோடு சிலரை அழைத்துக் கொண்டு கிளம்பினான். அவர்கள் ஒற்றைக் கண் ராட்சஸனின் குகைக்குள் அகப்பட்டுக் கொண்டார்கள் அதன் பிறகு -)

அந்த ராட்சஸனின் கரகரத்த குரல் இடி இடிப்பது போல இருக்கவே ரூபதரனும் அவனது பனிரெண்டு ஆட்களும் பயந்து நடுங்கினார்கள். அவனது பயங்கரத் தோற்றமும் அவர்களைக் குலை நடுங்கச்செய்தது. இன்னும் சற்று நேரத்திற்குள் அந்த ராட்சஸன் தம்மை எல்லாம் கொன்று விடுவான் என்று எண்ணிப் பயந்தார்கள். ரூபதரன் துணிச்சல் கொண்டு ராட்சஸனிடம் இவ்வாறு கூறினான்.

''ஐயா, நாங்கள் ட்ராயிலிருந்து எம் நாட்டிற்குச் செல்லும் கிரேக்கர்கள். கடலில் காற்று வேகமாக அடிக்க எங்கள் கப்பல்கள் வழிதவறி இத்தீவிற்கு வந்துவிட்டன. எங்கள் மன்னர் ராஜராஜன் உலகப் புகழ் பெற்றவர். பல நாடுகளை வென்றவர். ட்ராய் நகரை எரித்து சாம்பலாக்கியவர். நாங்கள் உங்கள் விருந்தினர்களாக



ராட்சஸன் ஏன் அதைக் கேட்டான் என்பது ரூபதரனுக்குத் தெரிந்து விட்டது. அதனால் தந்திரமாக அவன் ''எங்கள் கப்பல்களா? அவை ஏது? இந்தத் தீவின் கடற்கரைப் பாறை களில் மோதி உடைந்து போய் விட்ட னவே. அந்த விபத்தில் தப்பியவர்கள் நானும் இந்த என் ஆட்களுமே. மற்ற வர்களெல்லாம் கடலுக்கு இரையாகி விட்டனர்'' என்றான்.

ராட்சஸன் எதுவும் கூறவில்லை. அவன் தன் கைகளை நீட்டி இரு வரைப் பிடித்துத் தூக்கினான். அவர் களைத் தரைமீது ஓங்கி அடித் துக் கொன்று சமைத்து அவர்களது எலும்புகளைக் கூட மிச்சம் வைக்கா மல் விழுங்கி விட்டான். இதைக் கண்ட ரூபதரனும் மற்ற அவனது ஆட்களும் பயந்து போனார்கள்.

வந்திருக்கிறோம். எங்களுக்கு உண வளித்து வசதிகள் செய்து கொடுக்கு மாறு வேண்டுகிறோம்''.

இதைக்கேட்ட அந்த ஒற்றைக்கண் ராட்சஸன் இடிபோல் சிரித்து ''அட முட்டாளே! இந்த விருந்தாளி, வசதி என்பதெல்லாம் எங்களுக்குத் தெரி யாது. உங்கள் கப்பல்களெல்லாம் எங்கே இருக்கின்றன? அதை முதலில் சொல்'' என்று கேட்டான்.

ராட்சஸன் கப்பல்கள் எங்கே என்று கேட்டதும் ரூபதரன் எச்ச ரிக்கை பெற்றவன் போலானான். கப்பல்களில் உள்ளவர்களைக் கொல் லவே அவ்வாறு கேட்டான் என்ப தைப் புரிந்து கொள்ள ரூபதரனுக்கு ஒரு விநாடியே பிடித்தது.

ஒற்றைக்கண் ராட்சஸன் இவ்வாறு தன் சாப்பாட்டை முடித்து ஆறு குண்டாக்களிலிருந்த பாலை கடகட வென்று குடித்தான். பிறகு தன் ஆடு களின் மத்தியில் படுத்துக் கவலை இல்லாமல் தூங்கினான். ரூபதரன் கத்தியால் அந்த ராட்சஸனைக் குத்திக் கொன்று விடலாம் என எண்ணி னான். அப்போது அவனுக்கு ஒரு விஷயம் நினைவிற்கு வந்தது.

ராட்சஸன் குகையின் வாசலை பெரிய பாறையை வைத்தல்லவா அடைத்திருக்கிறான். அவனைக் கொன்றுவிட்டால் அந்தப் பாறையை யார் நகர்த்துவார்கள்? ராட்சஸன்

தான் நகர்த்த வேண்டும். எனவே ராட்சஸனைக் கொல்லக் கூடாது. குகையிலிருந்து தப்பிச் செல்ல முதலில் அதன் வாசலில் வைக்கப் பட்டுள்ள பாறையை நகர்த்தியாக வேண்டும். அதைச் செய்ய வேறு ஏதாவது வழியைத்தான் யோசிக்க வேண்டும்.

அன்றிரவு முழுவதும் ரூபதரனும் தூங்கவில்லை. மறுநாள் காலையான தும் ராட்சஸன் எழுந்தான். தன் ஆடு களின் பாலைக் கறந்து குண்டாக் களில் நிரப்பினான். பிறகு மேலும் இரு கிரேக்கர்களைப் பிடித்துச் சாப் பிட்டான். பிறகு பாறையை நகர்த்தி ஆடுகளை வெளியே ஓட்டினான். அதன்பின் வெளியே போய்ப் பாறையை நகர்த்தி குகை வாசலை அடைத்து விட்டுப் போனான். இதனால் கிரேக்கர்கள் அக்குகையிலி ருந்து தப்பி வெளியே செல்ல முடிய வில்லை.

ராட்சஸன் போன பிறகு ரூபதரன் குகைக்குள் குட்டி போட்ட பூனை போலச் சுற்றிச் சுற்றி வந்தான். தன் ஆட்களைக் கொன்று தின்ற ராட்ச ஸனை அவன் எப்படிப் பழி வாங்கு வது என்று யோசிக்கலானான். கடை சியில் அவனுக்கு ஒரு வழி தெரிந்தது. அக்குகையில் ராட்சஸனின் கைத்தடி ஒன்று இருந்தது. அது இன்னமும் நன்கு காய்ந்திருக்கவில்லை. அதில் ஐந்தடி நீளத்திற்கு வெட்டி அதன் நுனியைக்கூராக்கி அங்கே ராட்சஸன்



மூட்டி வைத்திருந்த நெருப்பில் காட்டி அதன் ஈரத்தைப் போக்கி ஓரிடத்தில் பத்திரமாக ஒளித்து வைத் தான்.

அன்றிரவு ராட்சஸன் தூங்கும் போது அந்தத் தடியால் அவனது ஒற்றைக் கண்ணைக் குத்தி அவனை குருடனாக்கிவிடுவதுஅவன்திட்டம். இதற்குத் தனக்கு உதவத் தன் ஆட் களில் நால்வரைத் தேர்ந்தெடுத்தான். மாலைப்பொழுதாகியது. ராட்சஸன் தன் ஆட்டு மந்தையை ஓட்டிக் கொண்டு வந்தான். ஆடுகளை குகைக் குள் ஓட்டித் தானும் உள்ளே வந்து குகை வாசல் பாறையை நகர்த்தி ஆடுகளை உள்ளே ஓட்டினான். எல்லா ஆடுகளும் குகைக்குள் வந்த



களைப் பார்க்க யார்தான் வருவார்கள்? நாங்கள்தான் எப்படியோ இங்கு வந்து விட்டோம். உங்களைப் பார்க்க அக்கம்பக்கத்திலுள்ள குகைகளில் வசிப்பர்கள் வரமாட்டார்களா? உங்களுக்கு ஏதாவது உதவி வேண்டுமென்றால் அணுக மாட்டீர்களா?'' என்று கேட்டான்.

ராட்சஸனும் ரூபதரன் கொடுத்த பானத்தை வாங்கிக் குடித்தான். அது அவனுக்கு மிகவும் ருசியாக இருந்தது. அதனால் அவன் ''இது மிக நன்றாக உள்ளது. இன்னும் கொஞ்சம் கொடு. உன் பெயர் என்ன?'' என்று கேட்டான். ரூபதரனும் ''என் பெயர் யாருமில்லை. நீங்கள் கேட்டபடி இன்னமும் கொடுக்கிறேன்'' என்று கூறி அவனிடமிருந்து மரக் குவளையை வாங்கி அதில் தன் தோல் பையிலிருந்த பானத்தை ஊற்றி ஊற்றிக் கொடுத்துக் கொண்டே இருந்தான்.

ராட்சஸனும் ''அப்பனே யாருமில்லை! நீ எனக்கு இப்படி ஒரு அருமையான பானத்தைக் கொடுத்ததால் உன்னைக் கடைசியில் கொன்று சாப்பிடுகிறேன். இதுதான் நான் உனக்குச் செய்யும் நன்றி'' எனக் கூறியவாறே தன் நினைவை இழந்து கீழே விழுந்தான்.

ராட்சஸன் இனி எழுந்திருக்க முடியாது என்றும் தான் அவனுக்குக் கொடுத்த பானம் அவனைச் செயலிழக்கச் செய்து விட்டது என்றும்

பின் அவனும் குகை வாசலை மூடினான். ஆடுகளின் பாலைக் கறந்துவிட்டு இரு கிரேக்கர்களைப் பிடித்து சமைத்துச் சாப்பிட்டான்.

அப்போது ரூபதரன் அங்கிருந்த ஒரு மரக் குவளையை எடுத்து அதில் தான் எடுத்து வந்திருந்த பானத்தை விட்டு எடுத்துக் கொண்டு ராட்சஸனருகே சென்றான். அவனிடம் ''ஐயா, நீங்கள் இந்தப் பானத்தைக் குடித்துப் பாருங்கள். நீங்கள் மனித மாமிசத்தைத்தான் சாப்பிட்டுப் பார்த்தீர்களேயொழிய இத்தகைய பானத்தைக் குடித்துப் பார்த்திருக்க மாட்டீர்கள். நீங்கள் மிகவும் மோசமானவர். எங்கள் மீது இரக்கம் கொள்ளக் கூடாதா? இப்படி இருந்தால் உங்

கண்டு ரூபதரன் மகிழ்ந்து போனான். அவன் உடனே தான் எண்ணிய படி செயல்படலானான். ரூபதரன் உடனே தான் பத்திரப்படுத்தி வைத் திருந்த தடியை எடுத்து அதன்நுனியை நெருப்பில் வைத்தான்.

அவன் தன் நான்கு ஆட்களையும் துணைக்கு அழைத்துக் கொண்டு நெருப்பில் வைத்த தடியை எடுத்துக் கொண்டு ராட்சஸனின் பக்கம் சென் றான். சூடாக உள்ள தடியின் நுனியை அவன் அந்த ராட்சஸனின் கண்ணில் குத்திச் சொருகி விட்டான்.

ராட்சஸன் குகையே இடிந்து விழு வது போல உரக்கக் கத்தினான். தன் கண்ணில் சொருகப்பட்ட தடியைப் பிடுங்கி எறிந்தான். அக்கம் பக்கத்தில் வாழும் ஒற்றைக் கண்ணர்களை அழைத்தான். அவர்களும் அந்த குகைக்குள் பாறையை விலக்கி விட்டு வந்தார்கள். அவர்கள் அவனி டம் ''ஏன் இப்படி கத்துகிறாய்? என்ன நடந்தது?'' என்று கேட்டார் கள்.

அவன் ''என்னைக் குருடனாக்கிக் கொல்ல முயல்பவன் யாருமில்லை'' என்றான். அவன் இதையே திரும்பத் திரும்பச் சொல்ல அவர்கள் ''உன் னைக் கொல்லப் போகிறவன் யாரு மில்லை என்றால் ஏன் இப்படிப் பைத் தியம் போலக் கத்துகிறாய்? பேசாமல் கிட'' என்று கூறினார்கள்.

ராட்சஸனோ ''என்னைக் கொல்ல முயல்பவன் யாருமில்லை என் றேனே. உங்களுக்கு புரியவில் லையா?'' என்று திரும்பத் திரும்பத்





ஆட்களைக் கட்டினான். தானும் ஒரு ஆட்டின் வயிற்றுப் பகுதியில் அதன் ரோமத்தைப் பிடித்துத் தொங்கினான். காலையில் ஆடுகள் வழக்கம் போல மேய அந்தக் குகையை விட்டு வெளியே சென்றன. அப்போது ராட்சஸன் எல்லா ஆடுகளின் முதுகுகளைத் தடவிப் பார்த்துத்தான் அவற்றை வெளியே அனுப்பினான்.

ஆடுகளின் வயிற்றுப் பகுதியில் தொங்கிக் கொண்டு வந்த ரூபதரனும் அவனது ஆட்களும் குகையிலிருந்து அவை வெளியே வந்ததும் அவற்றை விட்டுத் தனியே வந்தனர். சற்றும் தாமதியாமல் அவர்கள் அங்கிருந்து தம் படகை நோக்கி ஓடினார்கள்.

ரூபதரனும் அவனோடு சென்றவர்களும் என்ன ஆனார்களோ என்று கப்பலில் இருந்தவர்கள் கவலைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ரூபதரனும் அவனது ஆட்களும் படகில் வந்து கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தனர். ரூபதரனும் அவனது ஆட்களும் கப்பலில் ஏறிவிட்டார்கள். அப்போது ரூபதரன் ''கப்பலை விலைவாகச் செலுத்துங்கள். நாம் இத்தீவை விட்டு இப்போதே போய் விடவேண்டும். நம்மைத் தாக்க ஒரு ராட்சஸன் முயலலாம்'' என்றான்.

ரூபதரனின் கட்டளைப்படி கப்பலை வேகமாகச் செலுத்தினார்கள். இதற்குள் குருடனாகி விட்ட ராட்சஸனுக்குத் தன் குகையிலிருந்தவர்கள்

கேட்கவே அவர்களும் ''சரிதான் போ. உனக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கிறது. இல்லாவிட்டால் இப்படி உளறுவாயா?'' என்று கூறிக் கொண்டே அங்கிருந்து சென்றனர்.

குருடனான ராட்சஸன் அவர்கள் போனதும் தன் குகையின் வாசலில் போய் உட்கார்ந்து கொண்டான். கிரேக்கர்கள் குகையிலிருந்து அவ்வழியாகத்தான் தப்பிச் செல்ல முடியும். அவர்கள் அங்கு வந்தால் பிடித்து விடலாம் என நினைத்தே அவன் அங்கே உட்கார்ந்து கொண்டான்.

ரூபதரன் கள்ளனுக்குக் குள்ளன் தானே. அவன் அங்குள்ள ஆடுகளை மூன்று மூன்றாகச் சேர்த்துக் கட்டி மத்தியிலுள்ள ஆட்டின் வயிற்றில் தன்

எப்படியோ தப்பி ஓடி விட்டார்கள் என்ற விஷயம் தெரிந்தது. அவன் உடனே கடற்கரைக்கு ஓடி வந்து கவனமாக ஏதாவது ஓசை கேட்கிறதா என்று காதைத் தரையில் வைத்துக் கேட்கலானான்.

அப்போது அவன் காதில் கப்பல் வேகமாகச் செல்லும் ஓசை விழுந்தது அப்போது அவன் தன் குகையிலிருந்த கிரேக்கர்கள் எப்படியோ குகையி லிருந்து தப்பி வெளியேறிப் படகில் கடலில் சென்று கொண்டிருக்கிறார் கள் என்று புரிந்து கொண்டு விட் டான். அவன் உடனே ஒரு பெரிய பாறாங்கல்லை எடுத்து கப்பல் சென்ற திசையில் விட்டெறிந்தான். அது கப்பலுக்கு முன்னால் போய் விழுந்து கப்பலைக் கரைப் பக்கம் தள்ளலாயிற்று. இதைக் கண்ட ரூப தரன் துடுப்புகளை வேகவேகமாகப் போட்டு வலிக்கும்படிக் கூறினான். இதனால் கப்பல் கரைக்குப் போகா மல் கடலில் சற்று தூரம் போய் விட்டது.

ராட்சஸன் அதை அறியாமல் ''அடே! நீங்கள் என்னிடமிருந்து தப்ப முடியாது. பாறாங்கல்லை வீசியே உங்கள் கப்பலைக் கரைக்கு வரும்படிச் செய்து விடுவேன். தெரி யுமா'' எனக் கூறி இன்னொரு பாறாங் கல்லை எடுத்து எறிந்தான். அந்தக் கல் கப்பலின் முன்னால் போய் விழாமல் பின்னால்தான் விழுந்தது. அதனால் கப்பல் இன்னும் வெகு தூரத்திற்கு அலைகளால் தள்ளப்பட்டது.

இவ்வாறு அந்தக் கப்பல் தப்பவே மற்ற கப்பல்களும் வந்து அதனோடு சேர்ந்து கொண்டன. அவர்கள் தம் ஆட்களில் சிலர் ராட்சஸனுக்கு இரை யானதைக் கேட்டுக் கண்ணீர் வடித் தார்கள். இனி நாம் விரைவிலேயே தம் நாட்டை அடைந்து விடலாம் என்று எண்ணி அவர்கள் ஆனந்த கூத்தாடினார்கள். கப்பல்களும் அவர்களது உணர்ச்சிகளைப் புரிந்து கொண்டது போல வேகமாகச் சென்றன.

**(தொடரும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## உயிரினங்களின் சாமர்த்தியம்

அமெரிக்காவில் ஒரிகானாவிலுள்ள கிரேடர்லேக்தேசியப்பூங்காவில்ஜுன்19ந் தேதி 'ஃப்ராங்க்மில்லர்' என்றவாலிபர்தன் பெண் நண்பருடன் உலாவிக் கொண்டிருந்தார். அவர்களோடு 'பேர்' என்ற நாயும் இருந்தது. அது திரிந்து வரட்டும் என்று அவர்கள் விட்டு விட்டார்கள்.



அது புகைப்பனி படர்ந்த ஒரு குளக்கரையோரம் ஓடியபோது கால் தவறி கிடுகிடு பாதாளத்தில் விழுந்தது. அது வெகு நேரமாகியும் திரும்பி வராததால் நம்பிக்கை இழந்து தன் பெண் நண்பரை அழைத்துக் கொண்டு போய் விட்டார். ஆனால் ஒரு வாரத்திற்குப் பின் அந்த நாய் பக்கத்து கிராமம் ஒன்றில் பத்திரமாக இருப்பது தெரிந்தது. பள்ளத்தில் விழுந்த நாய் அதன் ஓரமாக நடந்து சென்று அந்த கிராமத்தை அடைந்திருக்க வேண்டும் எனக் கருதுகிறார்கள். அந்த பூங்காவின் அதிகாரியோ ''பிராணிகள் மிகுந்த சாமர்த்தியசாலிகளே'' என்கிறார்.

## தீராத கவலை

கேரளாவில் ஆலம்புழாவருகே மந்தரர் என்ற கிராமத்தில் சுனீல் என்பவர் ஒன்பது பூனைகளை வளர்த்து வந்தார். அவற்றில் அம்மணி என்ற பூனையை ஊரார் மிகவும் விரும்பி அதற்கு பிஸ்கட்களும் பச்சை மிளகும் கொடுத்து வந்தனர். அது அவற்றைத் தவிர வேறு எதுவும் அதாவது மீன் போன்றவற்றைச் சாப்பிடாமல் இருந்தது. இந்தப் பூனையைப் பற்றி ஒரு பத்திரிகை அதன் புகைப்படத்துடன் அதைப் பற்றிய விவரங்களை வெளியிட்டது. இது வெளியான மறுநாளே அந்தப் பூனை இறந்து விட்டது. இதை அடுத்து மற்ற பூனைகளும் ஒவ்வொரு நாளாக இறந்து போயின. இந்தக் கவலையில் மூழ்கியுள்ள சுனீல் இனிமேல் தான் பூனைகளையே வளர்க்கப் போவதில்லை என்று தன் நண்பர்களிடம் கூறி விட்டார்.

## செயற்கை நுரையீரல்

டோக்கியோ பல்கலைக் கழகத்தின் மருத்துவத் துறை உலக சாதனை ஒன்றைச் செய்துள்ளது. அங்குள்ள வைத்திய நிபுணர்கள் ஐந்தாண்டு ஆட்டிற்கு செயற்கை நுரையீரலைப் பொருத்தினார்கள். 400 நாட்களாகியும் அந்த ஆடு நன்றாகவே இருக்கிறதாம். இதுவரை அதாவது 1992ல் கூட அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அப்போது செயற்கை நுரையீரல் பொருத்தப்பட்ட ஒரு ஆடு 88 நாட்கள்தான் உயிருடன் இருந்ததாம்.




# வாக்குத் தவறினாளா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! உன் மனதை இளக்கி யாரோ உன்னை இப்படிப்பட்ட வேலையைச் செய்ய வைத்திருக்கிறார்களென்றே நான் நினைக்கிறேன். அப்படி இல்லாவிட்டால் மன்னனாகிய நீ இந்த பயங்கர நடுநிசியில் இவ்வாறு விடாப்பிடியாக முயற்சி செய்வாயா? மனிதர்களில் முக்கால்வாசிக்கும் மேல் சுய நலக்காரர்களே. தம் வேலை முடிந்து விட்டால் தாம் கொடுத்த வாக்குறுதிகளை மறந்து போய் விடுகிறார்கள். இதற்கு மந்திரபுரி மகாராணி மந்தாரவதி ஒரு உதாரணம். உனக்கு சிரமம் தெரியாமலிருக்க அவளது கதையைக்

## வேதாளம் சொல்லும் கதை



கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

மந்தாரவதி மந்திரபுரி மன்னன் மதனசேனனின் பட்டத்து ராணி. அவர்களுக்குத் திருமணமாகி பனிரெண்டு ஆண்டுகளாகியும் ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. மந்தாரவதி தனக்குக் குழந்தை வேண்டுமென்று செய்யாத பூஜை இல்லை. இருக்காத விரதம் இல்லை. போகாத கோவில் இல்லை. சோம வார விரதம் எடுத்துக் கொண்டு அன்று பட்டினி கிடந்து தலைநகரிலுள்ள முருகன் கோவிலுக்குப் போய் அர்ச்சனை செய்து வரலானாள். அங்கு அருகிலுள்ள அரச மரத்தின் கீழுள்ள பாம்புப் புற்றிற்கும் பால் வார்த்து நாக தேவதையை வணங்கி வந்தாள்.

ஒரு திங்கட்கிழமை அவள் கோவில் பூஜையை முடித்து விட்டு கோவில் அர்ச்சகரிடம் ''சுவாமி! நானும் முந்நூறு திங்கட் கிழமைகள் பட்டினி கிடந்து விரதம் எடுத்தும் இன்னமும் கடவுளின் மனம் இரங்கவில்லையே. எனக்கு ஒரு விடிவு காலமே வராதா?'' என்று மிகுந்த வேதனையுடன் கேட்டாள்.

அவரும் ''மகாராணி! மனம் தளர்ந்த விடாதீர்கள். அததற்கு நேரம் காலம் என்றிருக்கிறது. கடவுள் கண்டிப்பாக உங்கள் மனக் கவலையைப் போக்குவார்'' என்றார். மந்தாரவதியும் பெருமூச்சு விட்டவாறே ''எப்போதுதான் அவர் கருணை கிடைக்குமோ'' என்று கூறியவாறே வழக்கமாகப் பூஜை செய்யும் பாம்புப் புற்றிற்கும் சென்று அதனை வணங்கி நின்றாள்.

அப்போது ஒரு குரல் ''மந்தாரவதி! இங்கே வா'' எனக் கூப்பிடவே அவளும் குரல் வந்த திசையை நோக்கினான். சற்று தூரத்தில் சடை முடிகளோடு ஒரு சன்னியாசி கந்தல் ஆடைகளுடன் இருந்தார். அவர் புன்னகை புரிந்தவாறே ''மந்தாரவதி! நீ குழந்தை வேண்டுமென ஏங்கி விரதங்கள் இருந்து பூஜைகள் செய்தும் வருவது எனக்குத் தெரியும். உன் மனக்குறையைப் போக்கவே நான் வந்திருக்கிறேன்'' என்றார்.

தன் மனக் கவலையை அறிந்து அதனைப் போக்க வந்துள்ள அந்த சாது சாதாரணப்பட்டவரல்ல என்றும் சக்தி வாய்ந்தவராகத்தான் இருக்க வேண்டும் என நினைத்து அவள் அவரது கால்களில் விழுந்து வணங்கி, ''சுவாமி! எனக்கு அருள் புரியுங்கள்'' என்று வேண்டினாள். அவரும் தன் பக்கத்திலிருந்த ஒரு பையைக் காட்டி ''அதில் வாழைப்பழங்கள் உள்ளன. அவற்றிலிருந்து ஒன்றை மட்டும் நீ எடுத்து சாப்பிட்டால் உன் கவலை மறைந்து நீ விரும்பியபடி நடக்கும்'' என்றார்.

மந்தாரவதியும் அப்பைக்குள் இருந்த வாழைப் பழங்களைப் பார்த்தாள். சில சிறியனவாயும் மெலிந்தும் இருந்தன. சில பெரிதாயும் பருமானயும் இருந்தன. பெரியதாயும் பருமனாயும் உள்ள வாழைப் பழத்தைச் சாப்பிட்டால் கொழுகொழுவென்று குழந்தை பிறக்கும் என அவள் நினைத்தாள். அதனால் மிகவும் பருமனான பழத்தை எடுத்தாள். அது இரட்டைப் பழம். இரண்டு பழங்கள் ஒன்று சேர்ந்து இருந்தது.

அவள் தோலை உரித்து அந்தப் பழத்தைச் சாப்பிட்டாள். சாது சிரித்துக் கொண்டே தன் பையை எடுத்துக் கொண்டு போய் விட்டார். மந்திராவதியும் அரண்மனைக்குப் போய்த் தன் கணவனிடம் நடந்ததையெல்லாம் கூறினாள். அதைக் கேட்ட மதனசேனன் சிரித்துக் கொண்டே



''உனக்கு சாது சன்னியாசி சொல்வதெல்லாம் வேதம். என்னவோ எனக்கு நம்பிக்கை இல்லை'' என்றான்.

ஆனால் மன்னன் ஆச்சரியப்படும் விதத்தில் ராணி கர்ப்பவதியாக இருக்கிறாள் என்று அரசாங்க வைத்தியர் கூறினார். உரிய காலத்தில் மந்தாரவதி இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். ஆனால் அவை இரட்டை வாழைப்பழம் போல ஒட்டிக் கொண்டுதான் இருந்தன. அவற்றைப் பிரிக்க அறுத்துத் தனியாக்க வேண்டும். அதை ஆறு மாதங்களுக்குள் செய்து விட வேண்டும்.

மன்னன் அந்த அறுவை உடனே செய்யும்படி அரசாங்க வைத்தியரிடம்

கூறவே அவரோ ''இந்த அறுவையைச் செய்யக் கூடியவர் ஒருவர் தாம். அவர் பெயர் சிரோன்மணி. அவரோ நம் பரம விரோதியான இந்திரகிரியின் அரசாங்க வைத்தியராக இருக்கிறார். அவரை வரவழைத்தால் இக் குழந்தைகளை வேறாக்கிக் உயிர் வாழச் செய்யலாம்'' என்றார்.

மந்தரபுரி மன்னன் இந்திரபுரி மன்னனிடம் கெஞ்ச விரும்பவில்லை. இந்திரபுரி மன்னனோ ''இரட்டைக் குழந்தைகள் ஒட்டிப் பிறந்துள்ளனவாம் எதிரிக்கு! அவை ஆண் குழந்தைகளாக இருந்தும் அவனுக்குப் பயனில்லையே'' என்று கூறி மகிழ்ந்தான்.

மந்தாரவதியோ தன் கணவனிடம் சிரோன்மணியை அனுப்பும்படி இந்திரபுரி மன்னனுக்குக் கடிதம் எழுதுமாறு சொல்லிப் பார்த்தாள். ஆனால் மதனசேனன் தன் ஜென்ம விரோதிக்குக் கடிதம் எழுத முடியாது என்று கூறிவிட்டான். இனித் தன் கணவனிடம் சொல்லிப் பயனில்லை எனத் தெரிந்து கொண்ட மந்தாரவதி தானே இந்திரபுரிக்குப் போய் சிரோன்மணியை வேண்டி அறுவை செய்யச் சொல்வது என முடிவு செய்து கொண்டாள்.

அவள் தன் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளும்படி அரசாங்க வைத்தியரிடம் கூறி விட்டுத் தன் கணவனிடம் தன் பிறந்த வீட்டிற்குப் போய் விட்டு வருவதாகக் கூறிவிட்டு இந்திரபுரிக்குச் சென்றாள். அங்கு எளிதில் சிரோன்மணியின் வீட்டையும் கண்டு



பிடித்து விட்டாள்.

சிரோன்மணி பிரம்மசாரி. மந்தார வதி அவரது வீட்டை அடைந்தபோது அவர்தம் உணவைத்தாமே சமைத்துக் கொண்டிருந்தார். அவள் அவரது வீட்டுக் கதவைத் தட்டவே அவர் வந்து கதவைத் திறந்தார். அப்போது அவள் அவரது கால்களில் விழுந்து ''வெகு தொலைவிலிருந்து உங் களைக் காணவே வந்திருக்கிறேன். நீங்கள்தான் என் குழந்தைகளுக்கு உயிர்ப் பிச்சை அளிக்க வேண்டும்'' என்று கண்ணீர் மல்க வேண்டினாள்.

சிரோன்மணியும் ''கவலைப் படாதே அம்மா! வெகு தூரத்தி லிருந்து வருவதாகக் கூறுகிறாய். முதலில் நீ சாப்பிடு. பிறகு பேசலாம்'' என்று கூறி அவளை அழைத்து போய் இலை போட்டு உணவு பரிமாறினார். அவளும் உணவு உண்ட பின் தன் இரட்டைக் குழந்தைகளைப் பற்றிக் கூறினாள். அவரும் ''கவலைப் படாதே. உன் ஊர் எது என்று சொல். நான்அறுவை செய்து இரு குழந்தை களையும் காப்பாற்றுகிறேன்''.

மந்தாரவதியும் ''என் ஊர் மந்திர புரி. நான் மந்திரபுரியின் ராணி'' என்று கூறினாள். அதைக் கேட்ட சிரோன் மணி திடுக்கிட்டார். பிறகு அவர் ''நான் இந்த சஸ்திர சிகிச்சை செய்து முடித்தாலும் என் தலை வெட்டப் பட்டு இந்திரபுரிக் கோட்டை வாச லில் தொங்கவிடப்படும். இது உங்களுக்குத் தெரியாதல்லவே'' என் றார்.

அவளும் ''உங்களுக்கு எவ்வித





ஆபத்தும் வந்துவிடாதபடி நான் பார்த்துக் கொள்கிறேன். இது சத்தியம். என்னை நிராசையடையச் செய்யாதீர்கள்'' என்று வேண்டினாள். சிரோன்மணியும் சற்று யோசித்துவிட்டு ''சரி. கிளம்புங்கள் போகலாம்'' என்றார். அவர்கள் மந்திரபுரியை அடைந்த மறுநாளே சிரோன்மணி இரட்டைக் குழந்தைகளைச் சஸ்திர சிகிச்சையால் வேறாக்கி அவை ஆரோக்கியத்துடன் இருக்குமாறு செய்தார்.

அன்றே அரச தம்பதிகளின் கட்டளையின் பேரில் நாடு முழுவதும் ''சிரோன்மணியாரின் சஸ்திர சிகிச்சையால் மந்திரபுரி மன்னரின் இரட்டைக் குழந்தைகள் வேறாக்கப்பட்டு அரசவம்சம் தழைக்க வழி ஏற்பட்டது. இந்த அரிய சாதனை இந்திரபுரி அரசாங்க வைத்தியர் சிரோன் மணியாருடையதே. அவருக்கு இந்த நாடே நன்றி செலுத்துகிறது'' என்று பறைசாற்றுவிக்கப் பட்டது.

இந்தச் செய்தி எல்லா நாடுகளிலும் பரவியது. சிரோன்மணி மந்தாரவதி கொடுத்த பரிசுகளை ஏற்காமல் ''மகாராணியாரே! தாங்கள் எனக்குச் செய்த பெருத்த நன்மைக்கு நன்றி'' என்று கூறிவிட்டுத் தமது நாட்டிற்குச் சென்றார்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! மந்தாரவதி சிரோன் மணிக்கு வாக்குறுதி அளித்தாளே. அதை நிறைவேற்றினாளா? எந்த ஆபத்தும் அவருக்கு நேராமல் பார்த்துக் கொள்வதாகத் தானே கூறினாள்? ஆனால் சிரோன்மணியின் பெயரைப் பறைசாற்றி எல்லா நாடுகளும் அறியும்படிச்செய்தது அவருக்கு ஆபத்தை விளைவிப்பதுதானே? அவளது குழந்தைகளைச்சஸ்திரசிகிச்சையால் வேறாக்கி உயிருடன் வாழ வைத்த சிரோன்மணிக்கு இந்தப் பறைசாற்றுதலால் மந்தாரவதி துரோகம் செய்தது போலத்தானே ஆகிறது? இப்படிப் பறைசாற்றுவது சிரோன்மணிக்கு ஆபத்தை விளைவிக்கும் என்பது மந்தாரவதிக்குத் தெரியாதா? இப்படியெல்லாம் இருந்தும் அவள் தனக்குப் பெரிய நன்மை செய்திருப்பதாகக் கூறி சிரோன்மணி நன்றி தெரிவித்

தாரே. இது சரியா? எனது இந்த சந்தேகங்களுக்கு பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''சிரோன்மணி தன் வாழ்க்கை முழுவதும் வைத்தியராக இருக்கத் தீர்மானித்தவர். அதற்காக அவர் திருமணமும் செய்து கொள்ள வில்லை. உண்மையான வைத்தியர் என்பவர் தன் எதிரியே நோயாளியாகத் தன்னிடம் வந்தாலும் அவனுக்கு சிகிச்சை செய்வான். இக்காரணத்தால்தான் சிரோன்மணி மந்தாரவதியுடன் அவள் குழந்தைகளுக்கு சஸ்திர சிகிச்சை செய்யச் சென்றார். மேலும் அத்தகைய சிகிச்சை செய்யக் கூடியவர் அவரைத் தவிர வேறு யாரும் எந்த நாட்டிலும் இல்லை. அவரது பெயரும் புகழும் இந்திரபுரி உட்பட எல்லா நாடுகளிலும் பரவும். அவர் பெருமையை யாவரும் அறியச் செய்தாள். அவரை இந்திரபுரி மன்னன் கொன்றால் அவர் தன் தொழிலின் தர்மத்தைக் காக்க உயிர் நீத்தவர் எனப் பெயர் பெற்று விடுவார். இதை எண்ணி அம் மன்னன் பயந்து அவரை தண்டிக்கத் துணிய மாட்டான். அவன் சிரோன் மணிக்குகெடுதல் செய்ய நினைத்தால் மற்ற அரசர்கள் ஒன்று சேர்ந்து அவன் நாட்டின் மீது படை எடுத்து அவனை ஒழித்து விடுவார்கள். அது மட்டுமா? இந்திரபுரி மக்களே அந் நாட்டு மன்னனுக்கு எதிராகக் கிளம்பி விடுவார்கள். இப்படியெல்லாம் நடக்கும் என நினைத்தே மந்தாரவதி பறை சாற்றுவித்தாள். இதனால் சிரோன்மணிக்கு நன்மையே. இந்திரபுரி மன்னன் அவரைக் கொல்ல முடியாத நிலை ஏற்பட்டது. அதனால்தான் அவர் மந்தாரவதிக்கு நன்றி தெரிவித்தார். இருவர் செய்ததும் சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அரசாங்க ஆடலரசியா?

சாளுவ தேசமும் மாளவ தேசமும் நட்பு கொண்டு வாழ்பவை. எனவே சாளுவ மன்னன் தன் சபையின் நடன மாதான வசந்தவல்லியை மாளவ நாட்டிற்கு அனுப்பி வைத்தான். வசந்தவல்லியும் மாளவ நாட்டில் பல நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு விட்டு சாளுவ நாட்டிற்குத் திரும்பி வந்து கொண்டிருந்தாள்.

வழியில் ஒரு கொள்ளைக் கூட்டம் அவளை வழிமறித்தது. கொள்ளைக் கூட்டத்தைக் கண்டு அவளுக்குக் காவலாக வந்தவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள். கொள்ளைக்காரர்கள் வசந்தவலலியைத் தம் தலைவன் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

அத்தலைவனும் ''யார் நீ?'' என்று கேட்கவே அவளும் ''நான் சாளுவ அரசசபையின் ஆடலரசி'' என்றான். அத்தலைவனோ ''நான் நம்ப மாட்டேன். அரச சபை ஆடலரசி என்கிறாயே. எங்கே எங்கள் முன் ஆடு பார்க்கலாம்'' என்றான்.

வசந்தவல்லியும் ''சீச்சீ! நான் ஆட மாட்டேன். காட்டு மிராண்டிகளாய்த் திரியும் உங்களுக்கெல்லாம் என் நாட்டியத்தை ரசிக்கும் திறமை ஏது?'' என்று கேட்டாள்.

கொள்ளைக் கூட்டத் தலைவனும் ''ஆம். இவள் சொல்வது உண்மையே. இவள் அரச சபை ஆடலரசிதான். இவளையும் இவளது ஆட்களையும் மிக்க மரியாதையுடன் சாளுவ நாட்டின் தலை நகரில் கொண்டு போய் விட்டு வாருங்கள்'' என்று தன் ஆட்களுக்குக் கட்டளை இட்டான்.



# தக்காணத்தின் பலமான கோட்டைகள்

கருத்து: **மீரா உக்ரா** ◆ படங்கள்: **அரித்ரா**



**தே**வகிரியைத் தென்னிந்தியாவின் கோட்டை தலைவாசல் என்று கூறுகிறார்கள். தக்காணப் பீடபூமியில் கருங்கற்களின் மீது உறுதியாயும் கம்பீரமாயும் நிற்பதால் இதற்கு அப்படி யொரு பெயர் ஏற்பட்டது. நகரைச் சுற்றி பலமான மதில் சுவர் இருந்தது. அதுமட்டுமல்ல, நகருக்கும் கோட்டை இருக்கும் மலைக்கு மத்தியில் அதாவது மலையைச் சுற்றிலும் மூன்று அகழிகள் இருந்தன. பலமான சுவர்களும் இருந்தன. உள்ளே அகழியின் நீர் மட்டத்தை உயர்த்தவும் தாழ்த்தவும் தக்க ஏற்பாடுகள் இருந்தன. எதிரிகள் முற்றுகையிடும் போது நீர் மட்டத்தின் உயரத்தை அதிகரித்து அகழி மீதுள்ள பாலத்தை முழுகச் செய்து விடுவார்களாம். ஒருவேளை எதிரிகள் பாலத் தைத் தாண்டி உள்ளே வந்து விட்டாலும் நேராக அவர்கள் சுரங்கத்தில் நுழைய வேண்டியதே.

தேவகிரிக் கோட்டையின் பழைய பரிசீலனை சிகரம்

அரண்மனைக்குப் போக ஒரு சுரங்க வழிதான். அது இருட் டாய் அபாயகரமாக இருக் கும். வீரர்கள் சுவர்களின் பொந்துகளிலிருந்து எதிரிகளை வெட்டி வீழ்த்தி விடுவார்கள். எதிரிகளின் எண்ணிக்கை அதிகமாக இருந்தால் சுரங்கத்துள் புகை போட்டு அவர்களை மூச்சுத் திணறி இறக்கச் செய்வார்கள்.

சுரங்கம் நடுவே மூன்று பாதைகளாகப் பிரிகிறது. அதில் ஒன்றுதான் வெளிச்சத்தில் கொண்டு போய் விடும். மற்ற இரண்டிலும் சென்றால் ஆழமான பள்ளத்தில் விழுந்து விட வேண்டியதே.



தௌலாபாத் கோட்டையின் தத்ரூபப் படம்



சுரங்கப் பாதையிலிருந்து வெளியே வந்தாலும் பலவித இடைஞ்சல்களையும் தடங்கல்களையும் தாண்டித்தான் வரவேண்டும். அப்போதுதான் அரண்மனையை அடைய முடியும்.

இந்தக் கோட்டை கி.பி. இரண்டாவது நூற்றாண்டைச் சேர்ந்த சாலிவாகனர்கள் கட்டியது. யாதவர்கள் இதில் நூறு வருடங்களுக்கும் மேல் இருந்து ஆட்சி புரிந்தார்கள். அவர்களிடமிருந்து கி.பி. 1274ல் அல்லாவுத்தீன் கில்ஜி இதைக் கைப்பற்றினான். சுல்தான் மகம்மது பின் துக்ளக் இக்கோட்டையைப் பார்த்தபின் உலகிலேயே இது மிக பத்திரமான இடம் என கருதினான். அதனால்தான் தேவகிரியைத் தன் நாட்டின் நகராக ஆக்கிக் கொண்டான். இப்போது இது தௌலாதாபாத் என்று அழைக்கப்படுகிறது.

துக்ளக்கின் சிற்றரசனாகிய பாமினி ஷா குல்பர்க்காவைத் தன் தலைநகராக ஆக்கிக் கொண்டு பாமினி வம்சத்தை நிறுவினான்.

பாமினி ஷா வம்சத்தவர்கள் தம் தலைநகரை மூன்று அகழிகள் சூழ்ந்த

தௌலாதாதா பாத் கோட்டை சாந்த்மீனார்

பீடார் கோட்டை மதில் சுவர்களும் அகழிகளும்

குல்பர்கா கோட்டைப் பகுதி

மிக பலமானதும் பத்திரமானது மானபீடார் கோட்டைக்கு மாற்றினார்கள்.

தென்னிந்தியாவில் மிகப் பழமையான முஸ்லீம் கட்டடங் கள் பீடாரில் உள்ளன.

பாமினி சாம்ராஜ்யம் 15வது நூற்றாண்டில் வீழ்ச்சியுறலா யிற்று. கி.பி. 1490ல் யூசப் அதில்கான் பீஜப்பூரிலிருந்து பிரிந்து போய் அதில் ஷாஜி வம்சத்தை ஆரம்பித்தான். இந்த வம்சத்தைச் சேர்ந்த புகழ்பெற்ற மன்னனான மகம்மது அதில் ஷாவின் சமாதிதான் கோல்கும் பஜ் என்று கூறுகிறார்கள். இதன் அரை உருண்டை மேல் பகுதி உலகில் இம்மாதிரிப் படைப்பில் இரண்டாவது இடம் பெறுகிறது.



▲ கோல் கும்பஜ். இதற்குள் போய் ஒருமுறை கை தட்டினால் அது பத்து முறைகளுக்கும் மேல் எதிரொலிக்கும். கைக்கடியாரத்தை ஒரு சுவரருகே வைத்தால் அதன் 'டிக் டிக்' ஒலியை எதிர்புற சுவரருகே கேட்கலாம்.

தத்துவ மேதையும் கவிஞரும் இசைஞானியுமான இரண்டாவது இப்ரஹீம் அலி அதில் ஷா கட்டிய இப்ரஹீம் ரோஜா. முதலாவது தொழுகை இடம். இரண்டாவது சுல்தானின் சமாதி. ▼

தொலைவிலுள்ள நதிகளிலும், குளங்களிலிந்தும் தண்ணீரை பூமிக்கு அடியில் குழாய்கள் போட்டு கோட்டைகளுக்கு நீர் கிடைக்கச் செய்த அற்புதத் திட்டத்தை அதில் ஷாதான் வகுத்தவர்.

அகம்மது நகர் கோட்டை

அகம்மது நிஜாம் ஷா பாமினி என்ற மற்றொரு சிற்றரசன் பாமினி சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்து போய் அகம்மது நகரைத் தலைநகராகக் கொண்டு நிஜாம் ஷாஹி வம்சத்தை நிறுவினான்.

முகலாயர்கள் அகம்மது நகரக் கோட்டையை 1595ல் முற்றுகை இட்டார்கள். அப்போது தன் சகோதரனின் மகனது பிரதிநிதியாக நாட்டை ஆண்டு வந்த சாந்த் பீபீ உறுதியுடன் போராடினாள்.



சாந்த் பீபீ

கோட்டையில் ஆயுத சாமான்கள் தீர்ந்து போகவே பீரங்கிகளில் தங்கத்தை உருக்கிச் செய்த குண்டுகளைப் போட்டு எதிரியை அவன் எதிர்த்தானாம்.

இந்திய சுதந்திரப் போராட்டத்தின் போது அகம்மது நகர் கோட்டை ஒரு சிறைச் சாலையாகப் பயன்படுத்தப்பட்டது. சர்தார் பட்டேல், ஜவாஹர்லால் நேரு, அபுல்கலாம் ஆசாத், ஆசார்ய கிருபளானி போன்ற பெருந் தலைவர்கள் இச்சிறையில் அடைக்கப்பட்டார்கள். இந்தச் சிறையில் இருக்கும் போதுதான் ஜவாஹர்லால் நேரு 'டிஸ்கவரி ஆஃப் இண்டியா' என்ற புகழ்பெற்ற நூலை எழுதினார்.



# தவளை சங்கீதம்!

பனையூரில் பொன்னன் என்ற இளைஞன் இருந்தான். அவன் புத்தி சாலிதான். ஆனால் மகா சோம்பேறி. அவனது தந்தை இறக்கும் போது அவனுக்கு வயது பதினாறு.

ஒரு நாள் அவனது தாய் ''பொன்னா! நீ வயலுக்குப் போய் அதை கவனிக்காமல் விட்டால் அது தரிசாகிவிடும். அப்புறம் நமக்கு உணவுக்குக் கூடத் திண்டாட்டம்தான்'' என்றாள். அப்போது பொன்னன் ''அம்மா! வெயிலிலும் மழையிலும் மண்ணிலும் கல்லிலும் போய் என்னால் வயலை கவனிக்க முடியாது. வேறு ஏதாவது வேலை செய்யலாமென்றால் யாரும் எனக்கு வேலை கொடுக்கவும் தயாராக இல்லை. நான் எங்காவது போகிறேன்'' என்று கூறி வீட்டை விட்டுக் கிளம்பிக் கால் போன போக்கில் வெகு தூரம் போய் விட்டான்.

கால் வலிக்கவே அவன் நின்று விட்டான். அது அடர்ந்த காட்டிலுள்ள ஒரு பெரிய மரம். அவன் சுற்றுமுள்ள அடர்ந்த மரங்களையும் செடிகளையும் பார்த்து பயந்து நின்றான். எந்த நிமிடத்தில் புலியோ சிங்கமோ வருமோவென்று மிரள மிரளப் பார்த்தான். அப்போது அம்மரத்திலிருந்து ''புலியும் வராது சிங்கமும் வராது. நான்தான் வருவேன்'' என்று கூறிக் கொண்டே ஒரு பிசாசு குதித்து அவன் முன் நின்றது.

அவனைப் பார்த்து அது ''உனக்கு ஆச்சரியமாக இருக்கிறதா? எனக்கு சோம்பேறிகளைக் கண்டால் பிடிக்காது'' என்றது. பொன்னன் கோபத்தோடு ''என்னை சோம்பேறி என்று சொல்கிறாயா?'' என்று கேட்டான். பிசாசும் ''நீ எதைக் கேட்டாலும் கொடுக்கிறேன். ஆனால் முதலில் நீ என் நிபந்தனையை ஏற்க வேண்டும்''

—குரு. ரம்யா—



என்றது. பொன்னனும் ''என்ன நிபந்தனை அது?'' என்று கேட்கவே பிசாசும் ''நான் முதலில் உனக்கு ஆறாண்டு காலம் அடிமையாக இருந்து நீ சொன்ன வேலைகளை எல்லாம் செய்வேன். நீ ராஜபோகத்தில் ஆறாண்டு காலம் இருக்கலாம். ஆறு வருடம் முடிந்ததும் நீ எனக்கு அடிமையாக உன் வாழ்நாள் முழுவதும் இருக்க வேண்டும். நான் ஆறாண்டு காலம் உன் அடிமையாக இருக்கும் போது நீ சொல்லும் எந்த ஒரு வேலையாவது நான் செய்யத் தவறினால் இந்த ஒப்பந்தம் ரத்தாகி விடும். நான் என் வழியே போவேன். நீயும் உன் வழியே போய்விடலாம். சம்மதமா?'' என்று கேட்டது.

பொன்னனும் சம்மதம் எனவே மறுநிமிடம் அவனது சட்டைப் பைகளில் தங்க நாணயங்களாக நிறைய இருந்தன. பிசாசும் ''உனக்கு எது வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் என்னை நினை. நான் உன் முன் வந்து நீ சொல்லும் வேலையைச் செய்வேன்'' என்று கூறிவிட்டு மறைந்தது.

பொன்னன்தன் வீட்டிற்குப் போய் தன் தாயிடம் நடந்ததை எல்லாம் கூறித் தங்க நாணயங்களைக் காட்டினான். அவளோ ''நீ ஆறு வருடங்களுக்குப் பிறகு பிசாசின் அடிமையாகி விடுவாயே. வேண்டாம் இந்த ஒப்பந்தம்'' என்றாள். பொன்னன் அப்படிச் செய்ய மறுத்ததால் அவள் அவனை வீட்டை விட்டு வெளியே தள்ளிக் கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

பொன்னன் காட்டிற்குள் போய் பிசாசை நினைத்தான். அது அவன் முன் வந்தது. அவனும் ''நான் இந்தக் காட்டின் மறுபுற எல்லையில் வசதியான ஒரு மாளிகையில் வாழ விரும்புகிறேன். அதற்கான ஏற்பாடு செய்து கொடு'' என்றான். பிசாசும் காட்டின் மறு எல்லையில் ஒரு அழகிய மாளிகையை நிர்மாணித்து பொன்னனுக்கு வேண்டிய பணம் வீட்டு சாமான்கள், பணியாட்கள் என்று எல்லாவற்றையும் கொடுத்துவிட்டுச் சென்றது.

பொன்னன் அதில் ஒரு மாதகாலம் சுகமாகக் காலம் கழித்தான். பிறகு

அவன் பிசாசை நினைக்கவே அது அவன் முன் வந்தது. அப்போது அவன் ''நான் காட்டில் திரிய ஒரு யானையும் நான்கு குதிரைகளும் வேண்டும்'' என்றான். பிசாசு அவற்றைக் கொடுத்து விட்டுப் போயிற்று.

ஒரு மாதம் கழியவே பொன்னன் பிசாசை நினைக்கவே அது அவன் முன் வந்தது. அவன் அதனிடம் ''இந்தக் காட்டில் திருடர்கள் இருப்பதாகத் தெரிகிறது. என் வீட்டைக் காவல் காக்க நல்ல நாய்களாக வேண்டும்'' என்று கேட்டான். பிசாசு அவற்றையும் கொடுத்து விட்டுப் போயிற்று. வேறொரு முறையில் அவன் பிசாசிடம் தன் வீட்டைச் சுற்றி உயரமான மதில் சுவர் இருக்க வேண்டும் எனக் கேட்கவே, பிசாசு அதையும் செய்துவிட்டுப் போயிற்று.

இதற்குப் பின் அந்தப் பிசாசு ஏதாவது ஒரு வேலை செய்யத் திணறும் என நினைத்து அதனிடம் கடினமான வேலைகளைக் கூறலானான். பெரிய மரங்களைப் பிடுங்கி வேறு இடங்களில் நடச் சொன்னான். பெரிய பாறைகளைத் தூக்கி மலைச் சிகரத்தின் மீது வைக்கச் சொன்னான். பிசாசு அவற்றை எல்லாம் மளமள வென்று செய்து முடித்தது.

பிறகு அது ''நீ வேண்டுமென்றே எனக்குத் தொந்தரவு கொடுக்கவே இம்மாதிரி வேலைகளைச் செய்யச் சொல்கிறாய். ஆனால் நினைவில் வைத்துக் கொள். நீ எனக்கு அடிமை



யாகும் போது உன்னை வாட்டி எடுப்பேன்'' எனக் கூறியது. அதுகேட்டுப் பொன்னன் அந்தப் பிசாசிடமிருந்து எப்படித் தப்புவது என்று கவலைப் பட்டு யோசனை செய்யலானான்.

இப்படியாக நாட்கள் கழியலாயின. முடிவில் ஆறாவது ஆண்டும் வந்துவிட்டது. அப்போதும் அவன் என்ன கடினமான வேலையைக் கூறிய போதும் பிசாசு ஒரு நொடியில் அதைச் செய்து விட்டுப் போயிற்று. ஆறாவது ஆண்டு முடிய இன்னும் ஒரு நாளே இருந்தது. மறுநாள் காலையானால் அவன் பிசாசிற்கு அடிமையாக வேண்டும்.

என்ன யோசித்தும் பொன்னனுக்குப் பிசாசிடமிருந்து விடுபட ஒரு

வழியும் தோன்றவில்லை. அந்த இரவில் நல்ல மழை பெய்யவே எதிரிலிருந்த குளத்தில் தவளைகள் கத்தலாயின. ஒரு தவளை துள்ளிக் கரையில் குதித்து விட்டு அங்கே இருக்க முடியாமல் மீண்டும் குளத்திற்குள் குதித்துக் கத்தியது.

இதைக் கண்ட பொன்னனுக்கு மின்னல் போல ஒரு யோசனை தோன்றியது. அவன் உடனேயே பிசாசை நினைத்தான் அதுவும் அவன் முன் தோன்றி ''ஏதாவது வேலையா? நினைவு வைத்துக் கொள். இது தான் நான் செய்து முடிக்கும் கடைசி வேலை. நாளை காலை சூரியன் உதிக்கும்போது நீ என் அடிமை. பிறகு பார். இதற்கு வட்டியும் முதலுமாக உன்னிடம் வேலை வாங்குவேன்'' எனக் கருவியது.

பொன்னனும் ''சரி, சரி. எனக்கு இந்தத் தவளைகளின் சங்கீதத்தைக் கேட்டு ரசிக்க வேண்டும் என்று ஆசையாக உள்ளது. அதனால் இந்தக் குளத்திலுள்ள தவளைகளை எல்லாம் பிடித்து ஒரு மரத்தின் மீதுஉட்கார வைத்து பாடவை. எல்லாத் தவளைகளும் மரத்தின் மீது இருந்து சேர்ந்து பாட வேண்டும்'' என்றான். பிசாசும் அதை ஒரு நொடியில் செய்து விடுவதாகக் கூறி விட்டுப் போயிற்று.

ஆனால் பிசாசு குளத்துத் தவளைகளைப் பிடித்து மரத்தின் மீது வைக்க அவை குதித்து மறுபடியும் குளத்திற்குள் போய் விட்டன. பிசாசு எவ்வளவு முறை முயன்றாலும் அது பிடித்து மரத்தின் மீது வைத்த தவளைகள் மீண்டும் குளத்தில் குதித்தவாறே இருந்தன. பிசாசால் காலையாவதற்குள் அந்த வேலையைச் செய்ய முடியவில்லை.

முடிவில் அது ''என்னால் இதைச் செய்ய முடியுவில்லை. எனவே இனி நம் ஒப்பந்தம் இல்லை என்றாகி விட்டது. நான் போகிறேன்'' என்று கூறி மறைந்து போய் விட்டது. பொன்னனோ தனக்குக் கிடைத்தவற்றையெல்லாம் வைத்துக் கொண்டு சுகமாக வாழ்ந்தான்.





# முட்டாளுடன் வாதமா?

மூத்தூர் முத்தையனுக்கு தான் ஒரு அதிபுத்திசாலி என்ற நினைப்பு. ஆனால் அவ்வூராரோ அவனை ஒரு முட்டாள் என்றே கூறி வந்தனர். அவன் தான் மாகபுத்திசாலி என அவ்வூராருக்கு நிரூபித்துக் காட்ட வேண்டுமென நினைத்து கிராம அதிகாரி யிடம் சென்றான்.

அவரும் '' இதோ பார். இந்த ஊர் முழுவதும் உன்னைப் படு முட்டாள் என்றே நினைக்கிறது. நீ என்ன சொன்னாலும் கேட்க மாட்டார்கள். அதனால் இவ்வூரார் மதிக்கும் மற்றொரு ஊருக்குப் போய் அங்குள்ள அறிவாளியைக்கண்டு அவரைக்கொண்டு நீ புத்திசாலி என்று சொல்லவை. அப்போது நம் ஊராரும் உன்னை புத்திசாலி என்று ஏற்றுக் கொள்வார்கள்'' என்றார்.

முத்தையன் அடுத்த ஊருக்குப் போகலாமென அடி எடுத்து வைத்த போது அவ்வூருக்கு ஒரு சாது வந்தார். அவர் கூறுவதைக் கேட்க மக்கள் திரண்டு சென்றனர். அந்த சாது தன்னைப் பாராட்டினால் ஊராரும் தன்னைப் பாராட்டுவார்களென முத்தையன் நினைத்தான். சாது தினமும் அவ்வூரில் பிரசங்கம் செய்து வந்தார். அதனைக் கேட்க மக்களும் கூடி வந்தனர். எனவே அவனும் அவரது பிரசங்கத்தைக் கேட்கச் சென்றான்.

சாது அன்று பல விஷயங்களைக் கூறினார். உலகில் வெள்ளைக் காக்கை கிடையாது என்று கூறினார். எல்லா உயிரினங்களும் சமம் என்று உரைத்தார். ராவணன் மிகவும் படித்தவனானாலும் பிறர் மனைவியைக் கவர்ந்து சென்றதால் வீழ்ச்சியுற்றான் என்று கூறி மனிதர்களுக்குக் கெட்ட குணம் கூடாது என்று அறிவுரை கூறினார்.

பிரசங்கம் முடிந்தபின் முத்தைய்

—எஸ். வெங்கடராமன்—



யன் சாதுவை அவர் தங்கி இருந்த இடத்திற்குப் போய்க் கண்டான். அவன் அவரிடம் ''சுவாமி! தர்க்க சாஸ்திரத்தில் என்னை மிஞ்சுபவரே இல்லை. இன்று நீங்கள் கூறியவை தர்க்க சாஸ்திரத்திற்கு ஒவ்வாது. எனவே என் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள வந்தேன். காகங்களில் வெள்ளைக் காக்காய் என்பதே கிடையாது என்றீர்களே. அதற்கு அத்தாட்சி என்ன?'' என்று கேட்டான்.

சாதுவும் ''இதுவரை நான் ஒரு வெள்ளைக் காக்கையைக் கூடப் பார்த்ததில்லை'' என்றார். உடனே முத்தைய்யன் ''எனக்குத் தெரிந்து இதுவரை யாரும் கடவுளைப் பார்த்ததில்லை. அதனால் கடவுளே இல்லை என்றாகுமா?'' என்று கேட்டான். சாதுவும் ''கடவுள் இருக்கிறார் என்பதால் எவ்வளவோ பயன்கள் உண்டு. ஆனால் வெள்ளைக் காக்கை இருக்கிறதென்றால் ஒரு பயனும் இல்லையே'' என்றார்.

அது கேட்டு முத்தைய்யன் மெல்லச் சிரித்து ''உண்மையை அறிய ஒரு பயன் வேண்டுமா? நான் தர்க்க சாஸ்திரப்படி வெள்ளைக்காக்கை உள்ளது என நிரூபிக்கிறேன். நீங்கள் எல்லா உயிரினங்களும் சமம் என்று கூறினீர்கள். மனிதர்களிலும், நாய்களிலும், பசுக்களிலும் கருப்பு, வெள்ளை என்று இருக்கையில் காக்கையிலும் ஏன் இருக்கக் கூடாது?'' என்று கேட்டான்.

சாதுவும் 'இருக்கலாம்' எனவே முத்தைய்யன் ''அப்படியானால் நீங்கள் வெள்ளைக் காக்கை இல்லை எனக் கூறியது தவறுதானே'' என்று கேட்டான. அவரும் 'இருக்கலாம்' என்றார் முத்தைய்யன் ''நான் தர்க்க சாஸ்திரப்படி என் கருத்து சரி என்று நிரூபித்து விட்டேன். நீங்கள் உங்கள் கருத்தை நிலைநாட்ட முடியவில்லை'' என்றான்.

சாதுவும் ''வாதத்தை விட்டு சந்தேகம் இருந்தால் கேள்'' எனவே முத்தைய்யனும் ''ராமாயணத்தில் நான் ராவணனையே உயர்ந்தவனாகவும் ராமரைக் கெட்டவராகவும் கருதுகிறேன்'' என்றான். சாதுவும் ''இது அவரவர் அறிவைப் பொறுத்த கருத்து''

என்றார்.

முத்தைய்யனோ ''இது அறிவு சம்பந்தப்பட்டதல்ல. வால்மீகி ராம பக்தர். அவர் ராமரைக் கதாநாயக ராகப் புகழ்ந்தும், ராவணனை இகழ்ந்தும் வர்ணித்திருக்கிறார். இது சரியா?'' என்றான். சாதுவும் ''அது சரி. வால்மீகி ஏன் ராமபக்தர் ஆனார்? ராவணனுக்கு பக்தர்கள் ஏன் இல்லை?'' என்று கேட்டார்.

முத்தைய்யனும் ''ராவணனுக்கும் பக்தர்கள் இருந்திருப்பார்கள். ஆனால் போரில் வெல்பவன் உயர்ந்த வனாகி விடுகிறான். ராமர் எவ்வ ளவோ அநியாயங்களைச் செய்து ராவணனைக் கொன்றார். தன்னைப் பற்றி ராமாயணம் எழுதும்படி வால் மீகியிடம் கூறி அவர் உயர்ந்தவராகி விட்டார்'' என்றான்.

சாதுவும் ''அடேயப்பா! நீ எவ்வ ளவு புத்திசாலி!'' எனவே முத்தைய் யனும் ''நீங்கள் இப்படிச் சொல்கிறீர் கள். ஆனால் இந்த ஊரார் இப்படிச் சொல்வதில்லையே. இன்று நான் செய்த வாதத்தில் நீங்கள் தோற்று விட்டீர்கள். இதனை எல்லோர் முன்னும் விளக்கிக் கூறிநீங்களே என் னைப் பற்றிஅவர்களுக்குச்சொல்லுங் கள்'' என்றான்.

சாதுவும் ''சரி. நான் நாளை கூட் டத்தில் பேசுவதற்கு முன் உன்னை அழைக்கிறேன். இராமாயணம் பற்றி உனக்குத் தெரிந்ததை அப்போது எல்லோருக்கும் கூறு. நீ சொன்னது



சரியல்ல என்று யாராவது எதிர்த்துக் கூறுகிறார்களா என்று பார்ப்போம்'' என்றார். முத்தைய்யனும் அப்படியே செய்வதாகக் கூறினான்.

மறுநாள் சாது கூட்ட ஆரம்பத்தி லேயே முத்தைய்யனை அழைத்து விட்டு கூட்டத்தினரிடம் ''நீங்கள் இவர் சொல்வதை எதிர்த்துப் பேச விரும்பினால் தாராளமாகப் பேச லாம். இவர் உங்களுக்கு ஏதோ சொல் லப் போகிறார்'' என்றார். யாரும் எழுந்து வரவில்லை. அப்போது கிராம அதிகாரி எழுந்து ''இவன் சொல்வதை நீங்களே எதிர்த்து வாதம் புரியுங்கள்'' என்றார்.

இதைக் கேட்டு முத்தைய்யன் மிக வும் மகிழ்ந்து போனான். ஏனென்

றால் அவர்தான் தன்னிடம் தோற்று விட்டாரே என அவன் எண்ணினான். அவர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு ''முன்பெல்லாம் அம்மை நோய் வந்தால் மகாமாரி அம்மனுக் குப் பலியிடுவார்கள். சிலர் அது தவறு எனக் கூறி அந்நோயைத் தடுக்க மருந் தைக் கண்டுபிடித்தார்கள். முன்பு உலகம் தட்டையானது என நினைத் தார்கள். சில அறிவாளிகள் தவறு எனக் கூறவே பூமியைப் பற்றிப் பல புது விஷயங்கள் வெளிப்பட்டன. அறிவாளிகள் சொல்வதை ஏற்றால் மனிதர்கள் எவ்வளவோ பயன்களை அடையலாம்'' என்றார்.

ஊரார் அவர் கூறுவதை கவன மாகக் கேட்டனர். அதனால் தான் ஒரு மேதை என முத்தையயன் எண்ணி கர்வப்பட்டான். ''அறிவாளிகளின் யோசனைகள் எங்கும் சிதறி கிடப்ப தல்ல. ஆனால் பொது மக்கள் அவர் களை முட்டாள்கள் என்று கூறி விடு கிறார்கள். இந்த முத்தையனும் அப் படிப்பட்டவன் என நான் நினைக்கி றேன். இவனது யோசனைகள் என்றா வது உலகிற்குப் பயன்படலாம் அது வரை இவனை யாவரும் முட்டாள் என்றுதான் கூறுவார்கள்'' என்று சாது கூறவே எல்லோரும் 'கொல்'லென்று சிரித்தார்கள்.

அப்போது முத்தையயன் கோபத் தோடு ''என்னை முட்டாளென்று கூறாதீர்கள். திறமை இருந்தால் என்னை வாதம் புரிந்து வெல்லுங் கள்'' என்றான். அப்போது சாது புன் னகை புரிந்து ''அறிவாளிகள் முட் டாள்களுடன் வாதம் புரிய மாட்டார் கள். எனவே நானோ இந்த ஊராரோ இவனோடு வாதம் புரியத் தயாராக இல்லை. இதுதான் நமது புத்திசாலித் தனம்'' என்றார்.

கிராமத்தவரின் சிரிப்பு அடங்க வெகு நேரமாகியது. முத்தையய னுக்கு இப்படிப் பெருத்த அவமானம் ஏற்பட்டது. அதன்பின் அவன் தான் அதிமேதாவி என நினைத்து தன் புத்தி சாலித்தனத்தைப் பிறருக்குக் காட்ட முயலவே இல்லை.





# மகாபாரதம்

துருபதன் அனுப்பிய அந்தணர் பாண்டவர் இருந்த இடத்திற்கு வந்து ''எம்மன்னர் உங்களைப் பற்றிய விவரங்களை அறிந்து வரச் சொன்னார். எம்மன்னர் பாண்டு மன்னரின் நண்பர். அவர் தம் மகளை அர்ஜுனனுக்கு மணம் செய்து வைக்க எண்ணி இருந்தார். உங்களது குலம், கோத்திரம் முதலியவற்றைக் கேட்டுத் தெரிந்து வரச் சொன்னார்'' என்று கூறினார்.

தருமர் அந்த அந்தணரை உபசரித்து அமரவைத்து ''உங்கள் மன்னர் சுழல் மீனை அடித்து வீழத்துபவருக்குத் தானே தம் மகளை மணம் செய்து கொடுப்பதாக அறிவித்திருந்தார். அதன்படி என் தம்பி அதனை அடித்து வீழ்த்தி மன்னரின் மகளை அடைந்தான். எனவே உங்கள் மன்னர் விரும்பியது நிறைவேறிவிட்டது. எங்கள் குலம் கோத்திரம் எல்லாம் இனி அவருக்கு எதற்கு?'' என்று கேட்டார்.

இதற்குள் அவர்களை அழைத்து வர துருபத மன்னன் அனுப்பிய ரதங்கள் வந்து சேர்ந்தன. அவற்றோடு வந்தவர் பாண்டவர்களிடம் ''மன்னர் உங்கள் எல்லோருக்கும் ரதங்களை அனுப்பி இருக்கிறார். உங்களை எல்லாம் அரண்மனைக்கு அழைத்து வரச் சொன்னார்'' என்று பணிவுடன் கூறினார். பாண்டவர்கள் தனித்தனி ரதங்களில் ஏறிக் கொண்டனர். குந்தியும் துரௌபதியும் ஒரு ரதத்தில் அமர்ந்து கொண்டார்கள். ரதங்கள் தலைநகரை அடைந்தன. அதற்கு முன் துருபதன் அனுப்பிய பரிசுகளில்



பாண்டவர்கள் க்ஷத்திரியர்கள் பயன் படுத்தும் பொருள்களைத்தான் எடுத் துக் கொண்டனர். அதை அறிந்த துரு பதன் அவர்களை நேரில் கண்டதும் அவர்கள் க்ஷத்திரியர்களே என்று தெரிந்து கொண்டான்.

ஒரு மண்டபத்தில் யாவரும் கூடி னர். அங்கு துருபதன் தருமரிடம் ''ஐயா! நீங்கள் யார் என்பது எனக்குத் தெரியாது. நீங்க்ள் யாரென்று தெரிந் தால் தானே துரௌபதியை முறைப் படி விவாகம் செய்து வைக்க முடி யும்'' என்றான். அப்போது தருமர் ''நாங்கள் பாண்டவர்கள். இவர் எங்கள் தாயார் குந்திதேவி. நாங்கள் அரக்கு மாளிகையில் எரிந்து சாக வில்லை. அதிலிருந்து உயிர் தப்பி இப்படி அந்தணர்கள் வேடத்தில் இருந்து வருகிறோம்'' என்று உண் மையைக் கூறிவிட்டார்.

அதைக் கேட்டு துருபதன் ஆனந்தக் கண்ணீர் வடித்தான். ''நீங்கள் அரக்கு மாளிகையில் எரிந்து போகாமல் உயிர் தப்பியது நம் எல்லோருடைய அதிர்ஷ்டமே. உங்களுக்கு உங்கள் நாடு திரும்பக் கிடைக்கும்படிச் செய் கிறேன்'' என்று கூறினான். பாண்ட வர்களும் குந்திதேவியும் தங்கி இருக்க ஒரு நல்ல மாளிகையை ஏற் பாடு செய்தான். விரைவிலேயே நல்ல முகூர்த்தத்தைப் பார்த்து துரௌ பதியின் திருமணம் செய்து விடுவ தாகக் கூறினான்.

அப்போது தருமர் ''அது எப்படி முடியும்? அர்ஜுனனின் அண்ணன் மார்களான நானும் பீமனும் இருக்கி றோமே. எங்களுக்கு இன்னும் விவா கம் ஆகவில்லையே'' என்றார். அப் போது துருபதன் ''அப்படியானால் என் மகள் கிருஷ்ணாவை நீங்களே மணந்து கொள்ளுங்கள்'' என்றான்.

அப்போது தருமர் ''உமது மகள் விலையுயர்ந்த மாணிக்கம். மாணிக் கத்தை யாவருமே அடைய விரும்பு வார்கள். என் தாயாரின் விருப்பப்படி நாங்கள் ஐவரும் அவளை மணந்து கொள்கிறோம்'' என்றார். அதைக் கேட்டு துருபதன் திடுக்கிட்டான். அவன் ''ஒரு ஆண் பல பெண்களை மணப்பதாகக் கேட்டிருக்கிறோம். ஆனால் ஒரு பெண் பல ஆண்களை

மணந்தாள் என்று கேட்டதும் இல்லை. நடந்ததாகத் தெரியவும் இல்லை. இதுபற்றி நாம் யோசித்து நாளை முடிவு செய்வோம்'' எனத் துருபதன் கூறினான்.

அப்போது கிருஷ்ணத்வைபாயனர் என்ற வேத வியாசர் அங்கு வந்தார். எல்லோரும் எழுந்து வணங்கி அவருக்கு மரியாதை செய்தார்கள். அவரும் தமக்கு அளிக்கப்பட்ட ஆசனத்தில் அமர்ந்தார். அப்போது துருபதன் ''முனிசிரேஷ்டரே! எல்லா சாஸ்திரங்களையும் அறிந்தவர் நீங்கள். தருமரும் எல்லாம் தெரிந்தும் என் மகளை அவரும் அவரது மற்ற சகோதரர்களும் மணக்க வேண்டுமென்று கூறுகிறார். இது முறையா? சாஸ்திரம் ஏற்குமா?'' என்று கேட்டான்.

தருமரும் ''நான் முறை தவறி நடக்கமாட்டேன். சொல்லவும் மாட்டேன். எங்கள் தாயாரின் கட்டளை இது என்பதோடு முறையானதும் தான். நீங்கள் சந்தேகமே படவேண்டாம். கௌதமி வம்சத்தில் பிறந்த முனிவரின் பெண்ணான ஜடிலை ஏழு பேர்களுக்கு மனைவியானாள். தாக்ஷாயணி என்னும் பெண்ணும் ஒரு முனிவரின் மகளே. அவள் பத்து முனிவர்களின் மனைவியானாள். இவை புராணங்களில் உள்ளன'' என்றார்.

கிருஷ்ணத்வைபாயனரும் துருபத மன்னனிடம் ''அரசே! தருமர் கூறியது




தர்ம நியாயத்திற்கு ஏற்றதே. குந்தி கூறியதும் தவறல்ல. நீ கவலையை விட்டு இந்த ஐந்து சகோதரர்களுக்குமே உன் மகளை மணம் செய்து வை'' என்றார். அதன்பின் அவர் துருபதனைத் தனியே அழைத்துப் போய் துரௌபதியின் முன் பிறப்பைப் பற்றிக் கூறலானார்.

முன்காலத்தில் மௌட்கல்யர் என்ற முனிவருக்கு இந்திரசேனை என்ற மனைவி இருந்தாள். மௌட்கல்யர் தொழு நோயால் பீடிக்கப்பட்டவர். அதனால் அவரது மனைவிக்கு அவரால் எவ்வித சுகமும் இல்லாது போயிற்று. அவள் கணவனுக்காக ஏங்கி இறந்தாள். மறுபிறப்பில் அவள் காசி மன்னனின் மகளா



அருளுங்கள்'' என வேண்டினாள். முன் பிறப்பில் காசி மன்னனின் மகளாய்ப் பிறந்து பரமேஸ்வரனின் அருள் பெற்றவள்தான் இந்தப் பிறப்பில் உன் மகளாகப் பிறந்து பரமேஸ்வரனின் வரப்படி ஐவரை மணக்கப் போகிறாள்.''

கிருஷ்ணத்வைபாயனர் துருபதனிடம் இவ்வாறு கூறி மேலும் ஒரு திருமணத்தில் நிதந்தர் என்ற ராஜ ரிஷியின் ஐந்து மகன்களும் உசீவரை என்ற அரச குமாரியை மணந்து ஒற்றுமையாக வாழ்ந்ததையும் கூறினார்.

வேத வியாசரே இப்படிப்பட்ட திருமணம் தாராளமாக நடக்கலாம் என்ற கூறிவிட்டதால் துருபதன் கவலையை விட்டொழித்தான். பாண்டவர்கள் ஐவரும் துரௌபதியை மணந்து கொள்ள அவன் சம்மதம் தெரிவித்தாள். அன்றே முகூர்த்த நாள். அன்றே விவாகத்தை நடத்தி விடலாம் என கிருஷ்ணத்வைபாயனர் துருபதனிடம் கூறினார். துருபத னும் திருமண ஏற்பாடுகளை உடனே செய்யலானான்.

காம்பில்ய நகரம் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டது. எல்லா வீடுகளின் முன் வாசனையுடன் கூடிய நீரைத் தெளித்து முத்துக் கோலம் போட்டார்கள். நகர் விழாக் கோலம் பூண்டது. நகர மக்களின் ஆனந்தத்திற்கு அளவே இல்லை.

பெரிய மணப் பந்தல் போடப்பட்டது. பட்டுத் திரைச் சீலைகள்

கப் பிறந்தாள். அந்தப் பிறப்பில் அவள் மிக அழகாக இருந்தும் அவளுக்குத் தக்க கணவன் கிடைக்கவில்லை. அதனால் மனம் வருந்தி அவள் பரமேஸ்வரனைக் குறித்துத் தவம் செய்தாள். அவளது கடுந்தவத்தால் இளகி பரமேஸ்வரன் அவள் முன் தோன்றி அவளுக்கு என்ன வரம் வேண்டுமென்று கேட்டான்.

அவள் ''கணவன், கணவன், கணவன், கணவன், கணவன்'' என்று ஐந்து தடவை சொன்னாள். பரமேஸ்வரனும் ''நீ அடுத்த பிறப்பில் ஐந்து பேர்களை மணப்பாய்'' என்று கூறினார். அப்போது அவள் ''அப்படியானால் ஐவரையும் சமமாகப் பார்த்துக் கொள்ளும் சக்தியை எனக்கு

ஆங்காங்கு தொங்க விடப்பட்டன. வண்ண மலர் மாலைகள் தொங்க விடப்பட்டன. தங்கக் குடங்களில் புனித நதிகளின் நீர் கொண்டு வரப் பட்டது.

பாண்டவர்கள் ஐவரும் மங்கள ஸ்நானம் செய்து பட்டாடை உடுத்திக் கொண்டு மணப்பந்தலுக்கு வந்தார் கள். துரௌபதியும் உயர்ரக ஆடை களை உடுத்திப் பல்வித நகைகளை அணிந்து அங்கு வந்தாள் தௌமியர் அவர்களை மணப் பீடத்தில் உட்கார வைத்து ஹோமம் செய்து சாஸ்திரப் படி திருமணத்தை நடத்தி வைத்தார். தருமர், பீமன், அர்ஜுனன், நகுலன், சகதேவன் ஆகியோரின் திருமணங் கள் வரிசைப்படி நடந்தான்.



துருபதன் தன் மாப்பிளைகளுக்குத் தனித்தனியாக ஆபரணங்களையும் தங்க நாணங்களையும், ரதங்கள், குதிரைகள், யானைகள், பணிப் பெண்கள் என்று ஏராளமான பரிசு களை வழங்கினான். பாண்டவர்கள் ஐவரும் தன் மாப்பிள்ளைகளாகிப் போனதால் இனி தேவர்களே வந் தாலும் எதுவும் செய்ய முடியாது என்று எண்ணி துருபதன் பூரித்துப் போனான்.

விவாகம் முடிந்ததும் துரௌபதி குந்தி தேவியை நமஸ்கரித்து எழுந் தாள். அவளும் தன் மகன்களையும் மருமகளாய் வந்துள்ள துரௌபதி யையும் பார்த்துப் பார்த்து அகமகிழ்ந் தாள். அவள் துரௌபதிக்கும் பல நல்லுரைகள் கூறி அவளை ஆசீர்வதித் தாள்.

பாண்டவர்கள் ஐவரும் துரௌப தியை மணந்து கொண்டார்கள் என்று கேட்டதும் கிருஷ்ணர் அவர்களைக் காணப் பல பரிசுகளோடு வந்தார். அவர்களோடு அவரும் காம்பில்ய நகரிலே சுகமாகக் காலம் கழித்தார்.

துரௌபதியின் சுயம்வரத்தின் போது கர்ணனை எதிர்த்தவன் அர்ஜு னன் என்றும் சல்லியனை எதிர்த்தவன் பீமன் என்றும் எல்லா அரசர்களுக்கும் தெரிந்து போயிற்று. மேலும் பாண்ட வர்களும் குந்தியும் அரக்கு மாளிகைத் தீயில் எரிந்து போகாமல் தப்பிச் சென்று விட்டார்கள் என்பதும் யாவ ருக்கும் தெரிந்து போயிற்று.

ஹஸ்தினாபுரத்திற்குப் போய்ச் சேர்ந்த துரியோதனனுக்குக் கூட இந்தத் தகவல் தெரிந்தது. பாண்டவர்களின் அதிர்ஷடம் கண்டு துரியோதனன் மனம் குமறினான். அப்போது துச்சாதனன் ''அர்ஜுனன் பிராம்மண வேடத்தில் அன்று இருந்ததால் உயிர் பிழைத்தான். இல்லா விட்டால் அவனை விட்டு வைப்போமா? ஆனால் இப்போது அதுபற்றி நினைப்பதால் என்ன பயன்? ஏதோ அதிர்ஷ்டம் அவர்களைக் காப்பாற்றி விட்டது'' என்றான்.

அரக்கு மாளிகையை எரிக்க அனுப்பிய புரோசனன் செய்த தவறால்தான் இப்படி நடந்தது என்று துரியோதனனும் அவனைச் சார்ந்தவர்களும் இறந்து போன புரோசனனைக் கண்டபடி திட்டித் தீர்த்தார்கள்.

இப்படியெல்லாம் நடந்ததைக் கண்டு மகிழ்ந்தவன் விதுரனே. அவன் திருதராஷ்டிரனிடம் போய் துரௌபதியின் சுயம்வரம் பற்றிக் கூறினான். துரௌபதி துரியோதனனை மணந்து கொண்டாள் என எக்காரணத்திலோ திருதராஷ்டிரான் நினைத்து ''துரௌபதிக்கு பட்டாடைகளையும் முத்து ஆபரணங்களையும் அனுப்பி ஹஸ்தினாபுரத்திற்கு வரவழை'' என்று கூறினான்.

திருதராஷ்டிரன் தவறாகப் புரிந்து கொண்டதை அறிந்து விதுரன் ''துரௌபதி மணந்தது உன் மகனான துரியோதனன் அல்ல. பாண்டுவின் மகன்களான பாண்டவர்கள் ஐவரை'' என்று கூறினான். திருதராஷ்டிரனும் சமாளித்துக் கொண்டு ''எனக்குப் பாண்டவர்கள் மீது துரியோதனனை விட அதிகப் பிரியம். ஆகா! அவர்கள் வீராதி வீரர்கள். பெரியவர்களை மதிப்பவர்கள். விவரம் தெரிந்தவர்கள். துருபதனுடன் சம்மந்தம் செய்து கொண்டதால் மேலும் பலவான்களாகி விட்டார்கள் என்பதைக் கேட்டு மகிழ்ச்சி அடைகிறேன்'' என்றான்.

விதுரன் மனதிற்குள் சிரித்துக் கொண்டான்.



# கூடைக்குள்ளேயே இருக்க வேண்டியவை!

கந்தப்பன் தன் பத்து வயது மகனைப் புளியமாறால் அடித்துக் கொண்டிருந்தான். சிறுவனோ கதறிக் கொண்டிருந்தான். அப்போது அவ்வழியே சென்று கொண்டிருந்த பண்ணையார் பரமானந்தம் ''ஏனப்பா இவனை இப்படி அடிக்கிறாய்?'' என்று கேட்டார்.

கந்தப்பனும் ''இவன் செய்த வேலையைப் பாருங்கள். கோழிகளை வெளியே விடாமல் பத்திரமாய் கூடைக்குள்ளேயே மூடி வைத்துப் பார்த்துக் கொள்ளச் சொன்னால் எல்லா வற்றையும் வெளியே திரிய விட்டு விட்டு நிற்கிறான் மடப்பயல்'' என்றான்.

பண்ணையாரும் ''உன் வீட்டுக் கோழிகள்தானே. சற்று நேரத்தில் தன்னால் திரும்பி வந்து விடுமே. இதற்காக இவனை அடிப்பானேன்?'' என்று கேட்டார். அப்போது கந்தப்பன் ''அதில்லை. என் வீட்டுக் கோழிகளோடு நான் பிடித்து வைத்திருந்த மற்றவர்கள் கோழி களும் உள்ளனவே. அவற்றை யாராவது அடையாளம் கண்டு கொண்டால் என்ன ஆவது?'' என்றான்.

அப்போது பண்ணையார் ''ஓ! இதுவா விஷயம்! என் நான்கு கோழிகள் இரண்டு நாட்களாகக் காணவில்லை. நீ தான் பிடித்து வைத்திருக்கிறாயா? வா ஊர் பஞ்சாயத்து தலைவரிடம்'' என்று கூறி அவனை இழுத்துச் சென்றான்.

கந்தப்பன் 'திரு திரு' வென்று விழித்தான்!



# சீமை இலந்தை

ஒருமுறை பீகிங்கிலிருந்து சீனக் கவிஞரை கான்டனில் போய் இருக்குமாறும் அந்நகரை விட்டு வெளியேறக் கூடாது என்றும் அரசாங்கம் உத்தரவிட்டது. கான்டனில் அவருக்குத் தின்ன சீமை இலந்தைப் பழங்களே கொடுக்கப்பட்டன. அதைச் சாப்பிட்ட அவர் ''வெகு ருசியாக உள்ளது. இந்தப் பழங்கள் கிடைத்துக் கொண்டே இருந்தால் இந்த தண்டனையை எவ்வளவு வருடங்களுக்கு வேண்டுமானாலும் நான் அனுபவிக்கத் தயார்'' என்றாராம். இந்தப் பழங்கள் புத்த யுகத்தின் ஆரம்பத்தில் சீனாவிலிருந்து நம் நாட்டிற்கு வந்ததாகக் கூறுகிறார்கள்.

நம் நாட்டில் இது பீஹாரின் முஜப்பர்பூர் மாவட்டத்திலும், மேற்கு வங்காளத்தின் ஹுக்ளி மாவட்டத்திலும் உத்தரப் பிரதேசத்தில் டேராடூன் பகுதியிலும் தமிழ்நாட்டில் நீலகிரி மாவட்டத்திலும் அதிகமாக வளர்கின்றன. இவற்றைப் பயிரிடுவதில் நம்நாடு உலகில் மூன்றாவது இடத்தில் உள்ளது.

எப்போதும் பசுமை நிறத்திலுள்ள அம்மரங்கள் சுமார் 12 மீ. உயரம் வளர்கின்றன. கிளைகள் படர்ந்து கூர்நுனி இலைகளைக் கொண்டனவாக இவை இருக்கும். கிளைகளில் சிறுசிறு மலர்கள் கொத்துக் கொத்தாய் இருக்கும். காய்களும் முட்டை வடிவில் கொத்துக் கொத்தாய்க் காய்க்கும். பழங்கள் சிவப்பாக இருக்கும். இவற்றின் மேல் தோலை உரித்தால் உள் விதையைச் சுற்றி சதைப் பற்று இருக்கும். இது மிருதுவாய் சாப்பிட ருசியாய் இருக்கும். இதில் பி, சி, டி விட்டமீன்கள் நிறைய உள்ளன. வடஇந்தியாவில் ஜுலையிலும் தென்இந்தியாவில் ஏப்ரல் மே மாதங்களிலும் இவை காய்க்க ஆரம்பிக்கும். இவற்றின் விதை, தோல், பட்டை, மலர்கள் எல்லாம் மருந்திற்குப் பயன்படுகின்றன.



நம் நாட்டு முனிவர்கள்–5

# பிருகு

நம்நாட்டில் சிலரது வம்சங்கள் பெயர் பெற்ற முனிவர்களின் பெயர்களில் உள்ளன. பார்க்கவர்கள் என அழைக்கப் படுபவர்கள் புகழ்பெற்ற பிருகு முனிவ ரின் வம்சத்தவர்களே. பிருகு பழங்கால முனிவர். அவர் கடவுளை நேரில் கண்ட வர். அதனால் அவரைப் பற்றி மற்றவர் களுக்கு அம்முனிவர் எடுத்துரைத்தார்.

ஒருமுறை மகாவிஷ்ணுவை தரிசிக்க அவர் வைகுண்டத்திற்குச் சென்றார். அப் போது விஷ்ணு யோக நித்திரையில் ஆழ்ந்திருந்தார். பிருகு அவர் முன் நின்று காத்துப் பார்த்தார். வெகுநேரமாகியும் விஷ்ணு கண் திறக்கவில்லை. அதனால் பிருகு ''நான் வந்திருப்பது தெரிந்தும் இவர் என்னை வேண்டுமென்றே அலட்சி யப்படுத்துகிறார்'' என நினைத்து அவரது மார்பில் உதைத்தார்.

ஐம்புலன்களை அடக்க வேண்டிய முனிவர் இப்படிக் கோபம் கொண்டு தன்னை உதைத்ததை மகாவிஷ்ணு பொருட்படுத்தவில்லை. அவரது யோக நிலை கலைக்கப்பட்டதும் கண் விழித்து அம்முனிவர் தம்மை உதைத்தால் அவரது கால் காயப்பட்டு விட்டதோ என எண்ணி அவர் அக்காலைத் தடவி விட்டார். மகா விஷ்ணுவின் சாந்த குணத்தையும் பணி வையும் கண்டு பிருகு மனம் நெகிழ்ந்து அவரிடம் தம் செயலுக்காக மன்னிப்புக் கோரினார். இதனை பிருகு மற்றவர் களுக்கு விளக்கிக் கூறினார்.

நெருப்புப் பட்டால் எப்பொருளும் தன் அழுக்கை இழக்கட்டும் என பிரு குவே சாபம் கொடுத்தவர். மனிதர்களின் கடந்த, நிகழ், எதிர் காலங்களைக் கண்டறிய 'பிருகத்சம்ஹிதை' என்ற சோதிட நூலை உலகிற்கு அளித்தவரும் இவரே. அதில் இவரது புலமை வெளிப் பட்டுள்ளது.

சியவனர், சுக்கிரர், ஜமதக்கினி, பரசு ராமர், வால்மீகி முதலிய மாமுனிவர்கள் பார்க்கவ வம்சத்தைச் சேர்ந்தவர்களே.



# உங்களுக்குத் தெரியுமா?

1. அசோகச்சக்கரவர்த்தி தம் முதலாவது சாஸனத்தை எப்போது பிரகடனம் செய்தார்?
2. 'பகோடா' ஆலயங்களுள்ள நாடு எது?
3. நம் நாட்டில் ஆசியக் காட்டுக் கழுதைகள் எங்கு உள்ளன?
4. அமெரிக்காவின் இரு முக்கிய கட்சிகள் யாவை?
5. இந்தியா ஒரு ஓட்டம் கூட எடுக்காமல் நான்கு விக்கட்களை இழந்த 'டெஸ்ட் மேச்' எது?
6. இறக்கை இல்லாத பறவை எது?
7. ஐ.நா. பொதுச் சபையின் முதல் தலைவராக இருந்த இந்தியப் பெண்மணி யார்?
8. கால் பந்தாட்டங்களில் 1000 கோல்கள் போட்ட முதலாவது ஆட்டக்காரர் யார்?
9. சோழர்களின் தலைநகரம் எது?
10. ஆங்கிலேயர்களுக்கும் பிரஞ்சுக்காரர்களுக்கும் இடையே நம் நாட்டில் ஏழாண்டுப் போர் நிகழ்ந்தது. அப்போரின் பெயர் என்ன?
11. முகம்மது கஜினி நம் நாட்டின் மீது படை எடுத்தது எப்போது?
12. நம் நாட்டில் மக்கள் சபைக்கு அதிக உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் மாநிலம் எது?
13. தாஜ்மஹலை ஒட்டி ஓடும் நதி எது?
14. ஆக்ராவினருகே ஃபதேஹ்பூர்சிக்ரி நகரை நிர்மாணித்தவர் யார்?
15. இரண்டாவது சந்திகுப்தர் எந்தப் பெயரில் புகழ் பெற்றிருந்தார்?
16. மிகப் பெரிய அசைவ மிருகம் எது?
17. முதலாவது 'போலோ' கிளப்பை எங்கே நிறுவினார்கள்?
18. முதன்முதலில் நம் நாட்டிற்கு பீரங்கிகளைக் கொண்டு வந்து தாக்கிய ஆக்கிரமிப்பாளர் யார்?

## விடைகள்

1. கி.மு. 216ல்.
2. மியான்மியார்(பர்மா).
3. குஜராத்தின் கச் பகுதியில்.
4. டெமக்ரெடிக்கட்சி, ரிபப்ளிகன் கட்சி.
5. 1952ல் இங்கிலாந்தில்.
6. நியூசிலாந்தின் கீவி பறவைகள்.
7. விஜயலக்ஷ்மி பண்டிட்.
8. ஆஸ்திரேலியாவில் பிறந்து ஜெர்மனிக்காக ஆடிய ப்ராஜ் பைம்டர்.
9. தஞ்சாவூர்.
10. கர்நாடகப் போர்.
11. கி.பி.1000–1026க்குள் சுமார் 17 தடவைகள்.
12. உத்திரப் பிரதேசம்.
13. யமுனை நதி.
14. அக்பர் சக்கரவர்த்தி.
15. விக்கிரமாதித்தன்.
16. துருவக் கரடிகள்.
17. அஸ்ஸாமில் 1850ல் கசார் கிளப்.
18. பாபர்.

# பருப்பு வேகவில்லை!

காளையப்பனும் சோலைப்பனும் ஒரு வேலையும் செய்யாமல் திரியும் சோம்பேறிகள். எந்த வீட்டில் கல்யாணம், விருந்து என்று நடந்தாலும் சாப்பிட முதலில் போய் உட்கார்ந்து விடுவார்கள். ஒருநாள் அவர்களது ஊரில் யார் வீட்டிலும் கல்யாணமோ, விருந்தோ இல்லாததால் அவர்கள் இருவரும் அடுத்த ஊருக்குப் போனார்கள்.

அங்கு ஒரு வீட்டிலிருந்து சமையல் வாசனை வரவே அவர்கள் அந்த வீட்டிற்குச் சென்றார்கள். அங்கு கூட்டமும் அதிகமாக இருந்ததால் அதை ஒரு கல்யாண வீடு என்று நினைத்து விட்டார்கள். இலை போடப்பட்டதும் அவர்கள் உள்ளே நுழைய முயலவே ஒருவர் ஏதோ சந்தேகப்பட்டு அவர்கள் இருவரையும் நிறுத்தி ''யார் நீங்கள்?'' என்று கேட்டார்.

காளையப்பன் தான் மாப்பிள்ளைக்கு நெருங்கிய உறவினன் என்றான். சோலையப்பன் தான் மணப் பெண்ணிற்கு நெருங்கிய உறவினன் என்றான். அப்போது அவர்களைத் தடுத்தவர் ''அப்படியா? உங்களுக்கு விசேஷ மரியாதை செய்ய வேண்டும்'' என்று கூறி ''ஆனையப்பா'' என்று கூப்பிட்டார். வாட்டசாட்டமான ஆள் ஒருவன் நான்கு முரடர்களோடு வந்தான். அவர் அவனிடம் ''இந்தப் பெரிய மனிதர்களுக்கு நல்ல மரியாதை செய்'' என்றார். உடனே அவர்கள் அவர்களை நன்கு அடித்து துரத்தினார்கள். வெளியே தூக்கி எறியப்பட்ட இருவரும் இது ஏன் என்று திகைத்தனர்.

அவர்கள் போன வீடு கல்யாண வீடல்ல. அந்த வீட்டுக்காரன் இறந்த திவச நாள்!





# யோகியின் மந்திரம்

பசுபதியும் பார்வதியும் அன்னியோன்னிய தம்பதிகள். அவர்களுக்கு நான்கு மகன்கள். அவர்கள் ஒரு வருட வித்தியாசத்தில் வரிசையாகப் பிறந்தவர்கள். மூத்த மகனுக்கு இருபது வயதானபோது பசுபதி ஏதோ ஒரு நோய் வாய்ப்பட்டு படுத்த படுக்கையாய்க் கிடந்தான். அப்போது அவன் வயது நாற்பது. அவன் மனைவியின் வயது முப்பத்தைந்து.

பசுபதி பல வைத்தியர்களைக் கண்டும் அவனது நோய் என்ன என்று அவர்களால் கூற முடியவில்லை. அப்போது அவ்வூருக்கு யோகி ஒருவர் வந்தார். அவர் பசுபதியைப் பார்த்து விட்டு ''உனக்கு நோய் எதுவும் இல்லை. முன் பிறப்பில் நீ செய்த பாவத்தின் பலன் இது. நீ என்னோடு இமயமலைக்கு வா. அங்குள்ள காய்கனி கிழங்குகளைப் புசித்து தவம் செய்தால் நீ சரியாகி விடுவாய்'' என்றார்.

''இமய மலைக்கா? அங்கு நான் எவ்வளவு காலம் இருக்க வேண்டும்?'' என்று கேட்டான் பசுபதி. யோகியும் ''நீ இருபது ஆண்டுகள் அங்கு இருக்க வேண்டும்'' என்றார். அப்போது அவனது மனைவி பார்வதி அவரிடம் ''இவர் இந்தப் பிறப்பில் ஒரு பாவமும் செய்யவில்லையே. இவருக்கா இவ்வளவு கொடிய தண்டனை?'' என்று கேட்டாள்.

யோகியும் ''மனிதன் முன் பிறப்பின் பலனை அடுத்த பிறப்பில் அனுபவிக்கிறான். இவன் முன் பிறப்பில் செய்த பாவத்தின் பலனை இப்பிறப்பில் அனுபவிக்கிறான். இப்பிறப்பில் செய்யும் புண்ணியங்களின் பலனை மறு பிறப்பில் அனுபவிப்பான். உன் கணவன் நற்காரியங்களைச் செய்ய நீதான் காரணம். ஏனெனில் நீ முன் பிறப்பில் புண்ணியம் செய்தாய்''

—பாபநாசம் சாமா—



என்றார்.

பசுபதி வீட்டிலிருந்து நோயால் அவஸ்தைப்படுவதைவிட இமய மலைக்குப் போவதே நல்லது என நினைத்தான். ஆனால் தான் அங்கு போய் விட்டால் பார்வதியின் கதி என்ன ஆகுமோ என்று கவலைப் படலானான். தன் புதல்வர்கள் மணம் செய்து கொண்ட பின் தம் தாயாரைத் தம்மோடு வைத்து அவர்கள் காப்பாற் றுவார்களா என்றே பசுபதி கவலைப் பட்டான்.

அவன் யோகியிடம் ''நான் என் மனைவியைத் தனியாக விட்டு விட் டால் தவித்துப் போவாளே. என் புதல்வர்கள் நான் இங்கு இல்லாத சமயத்தில் அவளைச் சரிவர கவனித் துக் கொள்வார்களோ?'' என்று கவலைப்பட்டவாறே கூறினான்.

பசுபதி நினைப்பதைப் புரிந்து கொண்ட யோகி பார்வதியிடம் ''பசு பதிக்கும் உனக்கும் இருக்கும் இருபது வருட பந்தம் இப்போது தீர்ந்து விட்டது. இவன் என்னோடு இமயம் வருகிறான். நீ அங்கு வரமுடியாதே என்றுதான் கவலைப்படுகிறான். மேலும் நீ உன் புதல்வர்களுக்காக இங்கே இருக்க வேண்டியது மிகவும் அவசியம்'' என்றார்.

பார்வதி தானும் இமயத்திற்கு வருவதாகப் பிடிவாதம் பிடிக்கவே யோகி ''அங்கே நீ சிரமப்படுவாய். இவனோ தன் நோயைத் தீர்த்துக் கொள்ள அங்கு வருகிறான். இருபது ஆண்டுகளுக்குப்பின் இவன் திரும்பி வருவான். அப்போது நீ இவனோடு சேர்ந்து இருக்கலாம்'' என்றார். பார் வதியும் சமாதானம் அடைந்து பசுபதி இமயத்திற்குப் போக சம்மதித் தாள். பசுபதியின் நான்கு புதல்வர்களும் அவனிடம் ''நாங்கள் அம்மாவை நன்கு கவனித்துக் கொள்கிறோம். நீங்கள் கொஞ்சமும் கவலைப்படா தீர்கள்'' என்றார்கள்.

அப்போது யோகி அவர்களிடம் ''நான் உங்களுக்கு ஒரு மந்திரம் உப தேசிக்கிறேன். தினமும் அம்மந்திரத் தைக் கூறி உங்கள் தாயாரை பூஜிக்க வேண்டும். ஒரு நாள் கூட அவளைக் கஷ்டப்படுத்தக் கூடாது. அவள் மனம் நோகும்படி நடக்கக் கூடாது.

அவள் கூறுகிறபடி நடக்க வேண்டும். இப்படி ஐந்து ஆண்டுகள் ஒருவன் செய்தால் அவனுக்குப் பத்து லட்சம் ரூபாய் கிடைக்கும். ஆனால் இதைச் செய்வது கடினம். உங்களில் யார் இதைச் செய்ய முன் வருகிறீர்கள்?'' என்று கேட்டார்.

மூத்த மகன் ''தாயார் மிக உயர்ந்த வள் தன்நலமற்றவள். அன்பு காட்டுப வள் தன் மகனுக்காக எதையும் செய் பவள். எனவே நீங்கள் கூறியபடி நான் நடந்து என் தாயாரை நன்கு கவனித்துக் கொள்கிறேன். எனக்கு பத்து லட்சம் கிடைத்தாலும் சரி, கிடைக்காமல் போனாலும் சரி. நான் என் தாயாரை நடுத் தெருவில் திண் டாடும்படி விட்டு விட மாட்டேன்'' என்றான். மற்றவர்களும் யோகியி டம் இது போலவே கூறினார்கள்.

அப்போது யோகி ''சரிதான். ஆனால் நான் சொன்னதையெல்லாம் ஒருவரேதான் தொடர்ந்து செய்ய வேண்டும். உங்கள் தாயார், முதல் ஐந்து ஆண்டுகள் மூத்த மகனிடமும் இரண்டாவது ஐந்து ஆண்டுகள் இரண்டாவது மகனிடமும் மூன்றா வது ஐந்தாண்டுகள் மூன்றாவது மகனி டமும் நான்காவது ஐந்தாண்டுகள் கடைசி மகனிடமும் இருப்பாள். இது எல்லோருக்கும் சம்மதமா?'' என்று கேட்டார்.

நான்கு புதல்வர்களும் சம்மதம் என்று கூறினார்கள். ஆனால் பார்வதி கவலைப்படுவது கண்டு யோகி



புதல்வர்களை அங்கிருந்து போகச் சொல்லிவிட்டு அவளிடம் ''ஏன் கவலைப்படுகிறாய்?'' என்று கேட் டார். அவளும் ''இப்போது இவர்கள் அப்பாவிகள். சொன்னதற்கெல்லாம் தலையை ஆட்டினார்கள். பிற்காலத் தில் இவர்கள் மணம் புரிந்து கொண்டு வாழும்போது என்னவெல்லாம் நடக் குமோ? இவர்களுக்குத் திருமணமாகி மனைவியர் வந்து விட்டால் இவர் களது புத்தி இப்படியே இருக்குமா? அப்போது தம் மனைவிகள் பேச்சைக் கேட்டு நடப்பார்களோ என்னவோ'' என்றாள்.

யோகியும் ''ஒவ்வொரு மகனும் ஐந்தாண்டு காலத்தில் நீ சொல்கிறபடி தான் நடப்பார்கள். அவர்களிடையே

சகோதர பாசம் வளர நீ வழி செய். அவர்களைத் தம் காலின் மீது தாமே நிற்க வழி செய். ஐந்தாண்டுகளுக்குப் பின் மூத்த மகனுக்கு பத்து லட்ச ரூபாய் கிடைக்கும். அதுகண்டு இரண்டாவது மகன் உன்னை நன்கு கவனித்துக் கொள்வான். இப்படியே மூன்றாவது, நான்காவது மகன்களும் செய்வார்கள்'' என்றார்.

பார்வதியும் ''இது ஒரே சமயம் அவர்களுக்குக் கிடைக்கக் கூடாதா? இப்படி ஐந்தாண்டு இடைவெளி விட்டுத்தான் கிடைக்க வேண்டுமா?'' என்று கேட்டாள். யோகியும் ''நீ தாய்ப் பாசத்தால் இப்படிக் கூறுகிறாய். நீ அவர்களோடு சேர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பதே அவர்களுக்குப் பல லட்சங்கள் கிடைப்பது போல். பணம் வந்ததும் மூத்த மகன் உன்னைச் சரியாகக் கவனிக்காவிட்டாலும் மற்ற புதல்வர்கள் உன்னை நன்கு கவனித்துக் கொள்வார்கள். கவலைப்படாதே'' என்றார்.

பார்வதி தயங்கவே ''கவலைப் படாதே. இருபது ஆண்டுகளை நீ சுகமாகக் கழிப்பாய். இதனால் மன நிம்மதியுடன் உன் கணவன் இமய மலைக்குச் செல்வான். இருபது ஆண்டுகளுக்குப் பிறகு அவன் திரும்பி வந்ததும் நீ அவனுடன் வாழ்க்கை நடத்தலாம். உனக்கு ஆயுள் பலம் உள்ளது. நீ இன்னமும் நாற்பது ஆண்டுகள் உயிர் வாழப் போகிறாய்'' என்றார்.

அதைக் கேட்டு பார்வதி திருப்தி அடைந்து சரியெனத்தலையை ஆட்டினாள். அவள் கவலை எல்லாம் மறைந்து போயிற்று. அப்போது யோகி அவளது நான்கு புதல்வர்களையும் அழைத்து ''நீங்கள் எல்லோரும் ஒரே வீட்டில் உங்கள் தாயாருடன் இருப்பதே உங்களுக்குப் பல லட்சங்கள் கிடைத்தது போலாகும்'' என்றார்.

அவர் மீண்டும் அந்த மந்திரத்தைக் கூறவே யாவரும் புல்லரித்துப் போய் நின்றனர். பார்வதியின் கவலையும் மறைந்தது.






முன்காலத்தில் அவந்தி நகரில் சிம்மசேனன் என்ற க்ஷத்திரிய இளைஞன் ஒருவன் இருந்தான். அவன் பலமிக்கவன். துணிச்சல் கொண்டவன். முன்கோபி. அடிதடி என்ற சிறு விஷயங்களிலெல்லாம் இறங்கி கெட்டவன் என்று பெயர்பெற்றவன். அவன் செய்யாத பாவச்செயல் இல்லை. அவனை எதிர்த்தவர்கள் அவனது கத்திக்கு இரையாகினர்.

ஒருநாள் அவன் அந்நாட்டு மன்னனின் மைத்துனனோடு சண்டையிட்டு அவனை கொன்று விட்டான். அப்போதுதான் அவன் மனதில் பயம் ஏற்பட்டது. இனிதான் அந்த நாட்டில் இருந்தால் ஆபத்து என எண்ணித் தன் குதிரைமீது ஏறி அந்நாட்டு எல்லையைக் கடந்து போய் விடும் நோக்கத்துடன் ஓடிப் போனான். அவனது தலையை வெட்டிக் கொண்டு வருபவனுக்கு லட்சம் வராகன்கள் பரிசளிப்பதாக மன்னன் அறிவித்தது வேறு அவன் வேகத்தைத் தூண்டியது.

எங்கும் தன் குதிரையை நிறுத்தாமல் சிம்மசேனன் ஓட்டிக் கொண்டே இருந்தான். அதுவும் வெகுதூரம் ஓடிக் களைத்துப் போய் முடிவில் கீழே விழுந்து இறந்தது. அப்போதுதான் இன்னமும் அவந்தி நாட்டில் இருப்பது கண்டு தன் கால்களை நம்பி வேகமாக ஓடினான். முடிவில் ஒரு மலைச் சிகரத்தை அடைந்து திரும்பிப் பார்த்தான். தன்னை யாரும் பின் தொடரவில்லை என்று கண்டு மகிழ்ந்து அன்றிரவு அங்கேயே படுத்துத் தூங்கினான்.

மறுநாள் சூரியோதயம் ஆனதும் அவன் கண் விழித்துப் பார்த்தான். சற்று தூரத்தில் ஒரு அழகான நகரம் தென்பட்டது. மலையிலிருந்து இறங்கி அவன் அந்நகரை நோக்கி நடந்தான். வழியில் ஆடு மேய்ப்

—கி. சந்தியா—



பவன் ஒருவன் தென்படவே சிம்ம சேனன் அவனிடம் ''அதோ தெரிகிறதே ஒரு ஊர். அதன் பெயர் என்ன?'' என்று கேட்டான். ஆடு மேய்ப்பவனும் ''அதன் பெயர் தர்ம நகரம்'' என்றான்.

சிம்மசேனன் அப்படி ஒரு ஊர் தன் நாட்டில் இருந்ததாகக் கேள்விப் படவே இல்லை. ''தர்ம நகரமா? பெயரே விசித்திரமாக இருக்கிறதே! இங்குள்ளவர்கள் தான தர்மங்கள் செய்கிறார்களா அல்லது தர்ம நியாய மாக நடக்கிறார்களா? இவற்றில் ஏதாவது ஒன்று இருந்தாலே இதற்கு இப்பெயர் வந்திருக்க முடியும். அது புது பெயராக இருந்ததால்தான் தன் நாட்டு எல்லையைக் கடந்து வேறு நாட்டிற்குள் வந்து விட்டதாக அவன் தெரிந்து கொண்டான். அவன் அந்நகரில் அகலமான வீதிகள் வழியே சென்றான். இருபுறங்களிலும் பெரிய, உயர்ந்த கட்டடங்கள் இருந்தன.

மக்கள் நடமாட்டம் இருந்தது. சிலர் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் யாரும் நோயுற்றவர்களாகவோ பலமற்றவர்களாகவோ தென்படவில்லை. 'இது நல்ல நகரம் போலிருக்கிறது. இங்கு யாருமே துன்பம் அடைவதில்லை போலத் தோன்றுகிறதே' என அவன் எண்ணினான்.

அவன் ஒரு கடைப் பக்கம் சென்ற போது ஒரு வாலிபன் அக்கடையில் ஏதோ திருடிவிட்டு வெளியே பாதைக்கு ஓடி வந்தான். ஆனால் திடீரெனத் தரை பிளந்தது. அவ்வாலிபன் அந்த வெடிப்பில் விழுந்ததும் தரை, முன்போல மூடி சமதளமாகி விட்டது. இதைக் கண்ட சிம்மசேனன் ஆச்சரியப்பட்டான். அதைப் பார்த்த மற்றவர்கள் சற்றும் ஆச்சரியப்படாதது அவனுக்கு வியப்பையே அளித்தது.

அவ்வூரில் மக்கள் இறக்கும் விதம் அப்படித்தான் என்று விரைவிலேயே அவன் தெரிந்து கொண்டான். பல இடங்களில் பலர் பூமி வெடித்துப் புதைந்து போவதை அவன் கண்டான். யாராவது ஒருவன் மற்றவனுக்குத் தீங்கு செய்தால் அவனுக்கு உடனே இப்படி தண்டனை கிடைப்பதை

அவன் கவனித்தான்.

ஓரிடத்தில் ஒருவனை இன்னொருவன் கத்தியால் குத்திக் கொன்றான். உடனே அக்கொலையாளி பூமியில் புதைந்து போனான். இன்னொரு இடத்தில் நால்வர் ஒரு பெண்ணை வம்புக்கு இழுத்து அவளைத் தூக்கிச் செல்ல முயன்றார்கள். உடனே பூமி வெடித்து அந்த நான்கு பேர்களும் புதைந்து போனார்கள்.

அப்போது சிம்மசேனன் தன் மனதில் ''இப்படி ஒரு தண்டனை கிடைக்கும் எனத் தெரிந்தும் ஏன் இந்நகர மக்கள் குற்றம் புரிகிறார்கள்?'' என்று யோசிக்கலானான்.

அப்போது ஒரு சாது ''நீ இந்த ஊர்க்காரன் இல்லை என்று தெரிகிறதே. உன் மனதில் இவ்வூர்வாசிகள் இப்படி ஏன் இறக்கிறார்கள் என்று எண்ணித்தானே ஆச்சரியப்படுகிறாய்? நீ எந்த ஊரைச் சேர்ந்தவன்?'' என்று அவனைப் பார்த்துக் கேட்டார். சிம்மசேனனும் ''நான் அவந்திபுரத்தைச் சேர்ந்தவன். நீங்கள் கூறியது போல இவ்வூரார் ஏன் இப்படி இறக்கிறார்கள் என்று எண்ணியே ஆச்சரியப்படுகிறேன்'' என்றான். ''உன் ஊரில் மரணம் முன் கூட்டியே சொல்லிவிட்டா வருகிறது? அங்குள்ளவர்கள் திடீரெனச் சாவதில்லையா? பாவங்கள் புரிந்து வருந்துவது இல்லையா?'' என்று அவர் கேட்டார்.

சிம்மசேனனின் அகக் கண் அப்போது திறந்தது. தான் செய்த பாவச் செயல்களை எல்லாம் நினைத்துப் பார்த்தான். அவன் மனம் அதற்காக வருந்தியது. அவன் சாதுவின் கால்களில் விழுந்து ''சுவாமி, நான் மாபெரும் பாவி. காவலர்களிடமிருந்து தப்ப எண்ணி என் ஊரிலிருந்து ஓடி வந்தேன். ஆனால் நான் தப்ப வேண்டியது பாவத்திலிருந்து என இப்போது தெரிந்து கொண்டேன். எனக்கு நல்வழி காட்டுங்கள்'' என்று வேண்டினான்.

சாதுவும் அவனுக்கு அறிவுரைகள் கூறி நல்வழியில் நடக்கச் செய்தார்.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ செப்டம்பர் 20–ம் தேதிக்குள் போட்டிக் கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.

---

## ஜூலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : பிடிப்பது ஒரு வேலை.
இரண்டாவது போட்டோ : படைப்பது ஒரு வேலை.
பரிசு பெற்றவர் : திரு. ஏ.ஜி. வெங்கடேஸ்வரன், ஆண்டிமடம்.




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

பார்லே

# இப்போது பார்லே பாப்பின்ஸின் ஆனந்தம் தொடரும் பேக்கெட் தீர்ந்து விட்டாலும்



## பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பி பரவசமூட்டும் பரிசுகளைப் பெறுங்கள்.

**இலவசம்** 20 பார்லே பர்ப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் குறும்புத்தனமான புதிர் கிட். 10 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் ஃபன் பேட் மற்றும் ஜங்கிள் புக் ஸ்டிக்கர். 4 பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை அனுப்பினால் ஜங்கிள் புக் ஸ்டிக்கர்.

* இச்சலுகை இல்லாமலும் பாப்பின்ஸ் கிடைக்கிறது.




இப்போது பழங்களின் புதிய சுவைகளில்

முந்துங்கள்

பரிசுகள் குறைவாக உள்ளன

பார்லே பாப்பின்ஸ் மேலுறைகளை உங்கள் முகவரி மற்றும் தபால் தலை ஒட்டிய கவருடன் அனுப்ப வேண்டிய முகவரி: பாப்பின்ஸ் பாயிண்ட், த.பெ. எண். 907, பம்பாய்-400 057.

பழரசம் அல்லது பல்ப் கிடையாது.
கூடுதல் நறுமணங்கள் சேர்ந்தது.

everest/94/PP/186-tm